களும் சூரன்வதையும் பிற்காலத்து வடமொழி இலக்கியச் சான்றுகளில் கிடைப்பனவே. முருக வணக்கக்குழுவொன்று முதன்முதலில் சேவலைத் தனது குழுவின் குறியாகக் கொண்டிருந்து பின்னர் மயிலைக் குழுக்குறியாகக் கொண்ட குழுவை வெற்றிகொண்டிருக்கலாம். இதுபோல வேறு இனக்குழுக்குறிகளான நாகம் முதலியவற்றையும் இவ்வாறே தோல்வியடைந்த குழுக்களின் குறிகளாகவே கொள்ளலாம். அசுரரைக் கொன்றது, அவுணரைக் கொன்றது, சூரனைத்தடிந்தது, மலையைப் பிளந்தது போன்றவை, வடமொழிச் சான்றுகளிலிருந்து தமிழ் இலக்கியத்திற்கு வந்தனவென்றே தோன்றுகின்றன. ஏனெனில் மிகமுந்திய சான்றுகளில் அசுரர், அவுணர் கதைகள், குன்றெறிந்த கதை ஆகியவை தமிழிலக்கியங்களில் இல்லாமல் வடமொழி இலக்கியங்களிலேயே கிடைக்கின்றன.

12.7 பெரும்பாணாற்றுப்படையிலும், முருகாற்றுப்படையிலும் சூரனைக் கடவுள் மாய்த்த கதை உள்ளது. இக்கதை வடமொழி பாரதக்கதையோடு இங்கு வந்ததாகத் தெரிகிறது. முருகன் தாய்த்தெய்வத்தினின்று பிறந்த செய்தி தமிழ்நாட்டுக்கேயுரியது. வடநாட்டுச் சான்றுகளில் ஸ்கந்தன் ஆணின் வித்தினின்றும் பெண்ணின் கருப்பையின் உதவியின்றியே தரையில் பொய்கையருகில் சிசுவாக உருவானவன். வளர்த்த தாயர் தான் அவனுடைய தாயர் என்று உரிமை கொண்டாடியவர்கள்.

12.8 பரிபாடலில் தேவசேனை, வள்ளி சகக்கிழத்தி ஏசல் காணப்படுகிறது. தமிழ்நாட்டில் முருகனுக்கு வள்ளி மட்டும்தான் 5 ஆம் நூற்றுண்டுக்குமுன் மனைவியாக இருந்தாள். ஸ்கந்தக்கருத்து இங்கு வந்தபிறகு அவன் மனைவியான தேவசேனுவும், முருகனது மனைவியாகக் கருதப்பட்டாள்.

13.0 முடிவில் முருகனைப்போன்ற தெய்வங்கள் உலகமுழுவதிலும், பழங்குடி மக்கள் நிலையிலிருந்த சிறு குழுக்கள், நிலைத்த நாகரிகமடையும்போது உலோக உபயோகத்தைக் கற்றுக்கொண்டு பெருங்குழுக்களாக மாறும் காலத்தில், இளமை, வலிமை, போர்த்திறன், காதல் இயல்பு, இயற்கையை வெல்லும் திறன், (தீயையும் நீரையும் அடக்குபவன்) இதுபோன்ற தன்மைகளே உருவான கடவுள்களை மக்கள் கற்பனை செய்துள்ளார்கள். சமூக வளர்ச்சியின் ஏகதேச ஒற்றுமையால் தமிழ்நாட்டு முருகக்கருத்து வளர்ச்சியும், வடநாட்டு ஸ்கந்தக்கருத்து வளர்ச்சியும் ஒப்பிடத்தக்கனவாயுள்ளன. இவையிரண்டிற்கும் சில ஒற்றுமைகளும் சில வேற்றுமைகளும் இருக்கின்றன. இவை இணையும் பொழுது வேற்றுமை அம்சங்கள் மறைந்து, ஒற்றுமை அம்சங்கள் ஒன்ருகி ஒரேவிதமாக கடவுள் கதைகள் உண்டாயின. இந்த இணைப்புக்கடவுளின் சித்திரத்தை பிற்காலக் கந்தபுராணம் நமக்களிக்கிறது.

## Bibliography


I Early texts

(1) அகம் (2) புறம் (3) குறுந்தொகை (4) நற்றிணை

II Later texts

(1) முருகாற்றுப்படை (2) பெரும்பாணாற்றுப்படை (3) பரிபாடல் (4) கலித்தொகை.

III Discussion on Skanda Murugan cult
Journal of Archaelogical Society of South India 1962 — 1965.

IV (1) Lokeyata — Dr. Chattopadyaya

(2) Essays in Anthropology — M. N. Srinivas

(3) Art and Social life — Plekhanov

(4) Dictionary of Greek Myth — Gilbert Murray

(5) Dictionary of fact and fable

(6) Social Develooment — Progres Publishers Moscow



கொற்றவை
சிவன் மனைவியான காலம்
சிவகுமாரனுகும் தகுதி
பிட்சாடனர் கதையும் சிற்பமும்
ருத்திரன் தந்தை
அக்கினி தந்தை
தென்னாட்டில் பரவுதல் கி.பி.1 முதல் 7ம் நூற்றுண்டுவரை.
தாய்த்தெய்வங்கள், வேறுவேத தெய்வங்களோடு இணைப்பு
பாரதம்.
சிவகுமாரன் உமைகுமாரன்
பரிபாடல் முருகாற்றுப் படை
கொற்றவை சிறுவன் பெண்தெய்வத்தின் மகள்
சிறு குழுக்கள் போரால் இணைக்கப்பட்ட காலம்
முருகன் பல இனக்குழுக்களை வென்றவன்
கந்தபுராணம்
பாரதம். அக்கினிக்கும் சுவாஹாவுக்கும் பிறப்பு
முழுமையான இணைப்பு
கடம் பெறிந்தவன். மாமுதல் தடிதவன்.
முருகு
வேலன் வணங்கும் தெய்வம்
கங்கை, அக்கினி பிறப்புக் கதைகள் இராமாயணம்
வெறியாட்டு தினையும் ரத்தமும் உணவு.
வேலன் (பூசாரி வேலை எய்பவன்) (உலோகக் காலம், ஆதிச்சநல்லூர்) (முற்காலச்சங்க நூல்கள்)
குமாரக் கடவுள்
குழந்தைக் கடவுள்
ஆரண்யகம் ஸ்கந்தன் சிறு தெய்வம், ரிக் வேதம்
தமிழ்நாடு
கிரீசு
பாலஸ்தீனம்
கங்கைச் சமவெளி



கந்த முருக இணைப்புச் சிற்பம்



தோடர் மங்கையர்



முதியவரை வரவேற்றல்

# நீலகிரி தோடா பழங்குடி மக்கள்

சு. சக்திவேல் M.A..

[தோடர்களைப்பற்றிய நிரம்ப ஆராய்ச்சிகள் நிகழ்ந்துள்ளன. பழைய ஆராய்ச்சியின் சான்றுகளையும், தமது நேர் நோக்கு ஆய்வுகளையும் சேர்த்து தோடர் சமுதாய வாழ்வு பற்றிய மானிடவியல் கருத்துக்களை படைப்பு முறையில் உருவாக்கி அளித்துள்ளார். தமிழர் சமுதாய வரலாற்றை இவை ஒப்பியல் சான்றுகளாக அமையும். சுவையாக இருப்பது மட்டுமின்றி, இக்கட்டுரை மானிடவியல் ஆராய்ச்சிக்குச் சில அடிப்படை உண்மைகளை அளிக்கின்றது. — ஆசிரியர்.]

'எருமையின் குழந்தைகள்' என்றழைக்கப்படுகின்ற தோடா பழங்குடிமக்கள் பல நூற்றாண்டு காலமாக நீலகிரியில் வாழ்ந்து வருகிறார்கள். இவர்களுடன் படகர், கோத்தர் மற்றும் காட்டுப் பழங்குடிகளான குரும்பர், இருளர், பனியர் போன்றவர்களும் வாழ்ந்து வருகிறார்கள். தோடா ஆண்களும் பெண்களும் ஏறத்தாழ பழுப்பு நிறமுடையவர்கள். தோடா ஆண்கள் உயரமாகவும் நீண்ட மூக்குடனும் காணப்படுகின்றனர். இவர்களது மயிர் திண்மையாகவும், கறுப்பாகவும், அலை அலையாகவும் இருக்கின்றது. மற்ற பழங்குடி மக்களுடன் ஒப்பிடுமிடத்து, இவர்கள் நீண்ட தாடியுடனும் உடலெல்லாம் மயிருடனும் காணப்படுகிறார்கள். இளம் பெண்கள் சுருள் சுருளான மயிருடன் காணப்படுகின்றனர். பொதுவாக நீண்ட தலையுடனும் பழுப்புநிறக் கண்களுடனும் வட்டவடிவ முகத்துடனும் காணப்படுகின்றனர் எனலாம். இவர்கள் தங்களைத் 'தூதா' என்றே அழைக்கின்றனர். தோடர்களது வாழ்க்கை எருமை மந்தையைச் சுற்றியே சுழல்கிறது எனலாம். இப்பழங்குடி மக்களைப் போன்று ஆராயப்பட்ட பழங்குடி மக்கள் உலகிலே இல்லையெனலாம்.

தோடாப் பழங்குடி மக்கள் குறிப்பாகத் தோடர்நாடு, குந்தாநாடு, பெரங்காநாடு, மேற்குநாடு போன்ற இடங்களில் வாழ்கிறார்கள். இவர்கள் வாழும மந்துகள் எண்பதுக்கு மேல் உள்ளன. தோடர்களது மக்கட் தொகை கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாக எண்ணூறுக்குட்பட்டதாகயிருந்தது. 1868 ஆம் ஆண்டில் எழுநூற்றி நான்காகயிருந்த மக்கட்தொகை 1960-ஆம் ஆண்டுவரை ஏறத்தாழ அதே அளவில் இருந்தது எனலாம். இவர்களது மக்கட்தொகை குறைய பெண்நோயும் ஒரு காலத்தில் இவர்களிடையேயிருந்த பெண் சிசுக்கொலை (female infanticide) யும் முக்கிய காரணமாகும். டாக்டர் பண்டிட் அவர்கள் பருவமடைவதற்குமுன்பே உடலுறவு கொள்வதும் மக்

கட்தொகை குறையக் காரணமென்கிருர். இதனுல் பாலின உறுப்புகட்கு தீங்கு விளைகின் றது எனக்கூறுகிருர். தோடர்களைப்போன்று பல்கணவ மணத்தைப் பின்பற்றும் உத்திர பிரதேசத்திலுள்ள ஜோன்ஸார்-பாவா-பழங் குடி மக்களிடையேயும் மக்கட்தொகை பெரு காமல் ஒரே அளவாக இருப்பது இங்கு குறிப்பிடத்தகுந்ததாகும். தற்பொழுது நட மாடும் மருத்துவ உந்துவண்டிகள் மூலம் தோடர்கட்கு குமாரி பில்ஜெயின அவர்கள் மருத்துவ உதவிகளைச் செய்கின்ருர்கள். பெண்நோய் முதலியவை குறைந்து தோடர் களது எண்ணிக்கை தற்பொழுது ஆயிரத் திற்கு மேலிருப்பதாக குமாரி பில்ஜெயின் அவர்கள் என்னிடம் கூறிஞர்கள்.

தோடாப் பழங்குடி மக்களிடையே ஒரு பெருங்கால்வழி (moiety) உண்டு. தேர்த் தாள், தெவினி ஆள் என இருபெரும் பிரி வுண்டு. இவர்கள் அகமணப் பகுப்பைச் (endogamous) சார்ந்தவர்கள். ஒரு பெருங் கால்வழியைச் சார்ந்தவர் மற்ற பெருங்கால் வழியில் திருமணம் செய்துகொள்ளமாட் டார்கள். ஆனுல் மற்றகால்வழிப் பெண்களைக் காமக்கிழத்தியராக வைத்துக் கொள்வர். அப்பெண்ணினுடைய கணவனின் சம்மதத் துடனே 'புத்குளி' பரிசளித்து தொடர்பு வைத்துக்கொள்கின்ற பழக்கம் இன்றும் உள் ளது. இக்கால்வழியைச் சார்ந்த ஒவ்வொரு வரும் தாங்கள் தான் உயர்ந்தவர்கள் என்று கூறிக்கொள்கிருர்கள். தோடர்களிடையே பைகி, பெக்கன், குத்தன், கென்னு, தோடி என ஐந்து பிரிவுண்டு. மேட்ஜ் (1864) போன்ற மானிடவியலாரும் இப்பிரிவைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். பைகி என்ற பிரிவு தேர்த் தாள் பிரிவையும் மற்ற பிரிவுகள் தெவினி யாள் பெருங்கால்வழியையும் சாரும். தேர்த் தாள் பிரிவில் நொர்ஸ், காஸ், தாரோட்ரீ, மெள்காஸ், கேரொடர், பீர்கோட், நெற்றி, இனிகிதி, மேட் என்ற பத்துக் கால்வழிகள் உண்டு. தெவினியாள் பெருங்கால்வழியில் இயெதெ, அம்காஸ், மதிகெட்ர், பீட், கோனி கொர், பீர்கோட் என்ற ஆறு கால்வழிகள் (clans) உண்டு. தேர்த்தாள் பிரிவினர்தான் தங்களை உயர்வாகக் கருதிக்கொள்கிருர்கள்.

தோடர்களது பூர்வீகம்பற்றி பல கருத் துக்கள் நிலவுகின்றன. 1602-ஆம் ஆண்டு கொச்சி சிரியன் கிறிஸ்தவப் பாதிரியார் ஃபெர்ரிரி என்பவர்தான் முதன்முதலில் தோடர்களைக் கண்டுபிடித்தார்.[1] அதைத் தொடர்ந்து உலகத்தின் கவனத்தையே கவர்ந்தவர்கள் தோடர்கள் எனின் மிகையா காது. இவர்களது பூர்வீகத்தைப்பற்றிய கதைகளோ அல்லது வாய்மொழி இலக்கி யமோ (Oral literaturc) ஒன்றும் இல்லை. டாக்டர் போப் அவர்கள் 'தொழுவன்' 'மந்தையுடையவன்' என்ற தமிழ்ச் சொல்லி னின்று தொதுவா, தூத என மாறியதாகக் கூறுகிருர். ஆனுல், இக்கருத்து அவ்வளவு ஏற்புடைத்ததாகத் தெரியவில்லை. தோடர் கட்கு ரோமானியர்களைப்போன்று மூக்கு இருப்பதால், ரோமானிய இனத்தைச் சார்ந் தவர்கள் என்று சிலர் கூறுகிருர்கள். தோடர் களைப்பற்றி மைசூர்க் கல்வெட்டொன்றில் குறிக்கப்பட்டுள்ளது. மைசூரை ஆண்ட விஷ்ணுவர்த்தனன் நீலகிரியைக் கைப்பற் றியதாக இக்கல்வெட்டுச் சான்று கூறுகிறது. முதன்முதலில் தோடர்களைப்பற்றி இக்கல் வெட்டில்தான் குறிக்கப்பட்டுள்ளது. இக் கல்வெட்டின் காலம் கி. பி. 1172 . எனவே, கி. பி. 12-ஆம் நூற்ருண்டிலே தோடர்கள் நீலகிரியில் இருந்தனர் என்பதற்கு வரலாற் றுச் சான்றுகள் உள. மேலும் இதற்குமுன்பு எப்பொழுது நீலகிரிக்கு வந்தனர்? அல்லது நீலகிரியிலே பிறந்து வளர்ந்த இனமா? என் பதும் ஆராய்ச்சிக்குரியதாகும். இராவண னிடம் பல்லக்குத் தூக்குபவர்களாக பணி யாற்றி இராமன் இராவணனைக் கொன்ற பிறகு இங்கு வந்து குடியேறியதாக வயது முதிர்ந்த ஒருவர் கூறியதாக பி. எஸ். வார்டு குறிப்பிட்டுள்ளார்[3] . தோடர்களது

குடிசை அமைப்புக்கொண்டு பல்லவ இனத்தைச் சார்ந்தவர்களாகயிருக்கவேண்டுமென சிலர் ஊகிக்கின்றனர். இவர்கள் தங்களைப் பஞ்சபாண்டவ வம்சம் என்று கூறிக்கொள்கிருர்கள். சிலர் பஞ்சபாண்டவரை வணங்குவதை நேரிலே கண்டேன். "அர்ஜுனன் குகை" யென்றும் ஒன்று உள்ளது. பஞ்சபாண்டவ வம்சம் என்பதற்கேற்ப, ஒரு பெண்ணைப் பல ஆண்கள் மணக்கின்ற வழக்கமும், (polyandary) இவர்களிடையே உண்டு. மலையிலுள்ள பஞ்சபாண்டவ நினைவு சின்னத்தையும் எனக்குக் காட்டினுர்கள். பஞ்சபாண்டவ வம்சம் என்று கூறிக்கொள்வதிலே பல தோடர்கள் பெருமைப்படுகிருர்கள். தோடர்களது பண்பையொத்த ஓர் இனமானது டெக்கான் பகுதியை ஆண்டதாகக் கூறப்படுகிறது. நர்மதா நதிக்கரையில் அமைந்த மஹிசமாதி பற்றியும் குறிக்கப்பட்டுள்ளது. புத்த வரலாற்றிலும் (240 B. C.) மஹிஷ மண்டலத்தைப்பற்றிக் குறிக்கப்பட்டுள்ளது. அஃது எருமைநாடு எனக்கூறுகின்றனர். சங்க இலக்கியமான புறநானூற்றிலும் மைசூரை 'எருமை நாடு' என குறிக்கப்பட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கது[4]. தோடர்களது தெய்வங்களின் பெயர்களும் சுமேரியர்களது தெய்வங்களின் பெயர்களும் தொடர்புடையதாகக் காணப் படுவதால் தோடர்களிடையே ஆய்வு நடத்திய கிரேக்க அரசர் பீட்டர் அவர்கள் (Prince Peter of Greece .......) தோடர்கள் சுமேரிய இனத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுகிருர்[5]. மொசபடோமியாவில் காணப்படும் குடிசைகள் போன்று தோடர்களது குடிசை காணப்படுவதும் தோடர்களது வாழ்வு எருமையைச் சுற்றி சுழல்வது போல ஈராக்கில் நீர் எருமையிருப்பதும் இக்கருத்தை வலியுறுத்துவதற்கு ஏதுவாகிறது. ஆனுல், டாக்டர் அய்யப்பன் போன்ருேர் இதனை மறுத்து, தோடர்கள் தொல் மத்தியதரைக்கடல் இனத்தைச் சார்ந்தவர்கள் என்று கூறுகிருர். பல்கணவர் மணம் காமக்கிழத்தியர்உறவு, மாப்பிள்ளை மணப்பெண்ணுக்கு துணி கொடுத்தல், இறந்தவர் மீது நெருங்கிய உறவினர் துணிபோர்த்துதல் மணச்சடங்கில் வில்லம்பு பயன்படுத்தல் ஆகியவை தோடா பழங்குடி மக்கட்கும் மலபாரிலுள்ள மக்கட்கும் பொதுவாகயிருப்பதால், இவர்கள் மலபாரிலிருந்து வந்திருக்கலாமென டாக்டர் ரிவர்ஸ் கருதுகிருர். சமயச் சடங்கில் சாமியாடுபவர் மலையாள மொழியில் பேசுவதையும் மற்ற தோடர்கள் அவரிடம் தோடா மொழியில் கேள்வி கேட்பதையும் நேரிலே கேட்டேன்.

மேலே கூறப்பட்ட பழக்கவழக்கங்கள் அனைத்தும் தோடர்கட்கு மட்டுமின்றி மற்ற எல்லாத் தென்னிந்தியப் பழங்குடி மக்கட்கும் பொருந்தும். பல நூற்ருண்டு காலமாக தனித்து வாழ்ந்த வாழ்க்கையின் பலனுக, சில சிறப்புத் தன்மைகளை அவர்களிடம் காண்கிருேம். மேலே கண்டவற்றைக் குறித்து ஆராயுமிடத்து தோடர்கள் நீலகிரியிலேயே பிறந்து வளர்ந்த இனமர்கயிருக்க வேண்டும் எனக் கருதுகிறேன்.

ஆண்களும் பெண்களும் 'புத்குளி' எனும் ஆடையை அணிகின்றனர். இப்போர்வை சித்திர வேலைப்பாடமைந்தவையாகும். துணி மணிகளில் பூ வேலைப்பாடு செய்வதில் தோடாப் பெண்கள் கைதேர்ந்தவர்கள். கோயில் பூசாரி கருப்பு துணிதான் அணிகிருர். பருவப்பெண்கள் மார்பிலும் கையிலும் தோலிலும் பச்சை குத்திக்கொள்கிருர்கள். எல்லா தோடர் ஆண்களும் முழங்கால் வரை வேஷ்டி அணிந்து, 'புத்குளி' போர்த்திக்கொள்கிருர்கள். எல்லாரும் கையில் ஒரு குச்சி யொன்று வைத்திருப்பார்கள். பெரும்பாலும் அவர்கள் செருப்பே அணிவதில்லை. இதைப்பற்றி அவர்களிடம் கேட்டபொழுது தகுந்த காரணம் கூறவில்லை. பெண்கள் சின், கனேஸ், பள், சரடு, கொலுசு, குந்து போன்ற அணிகலன்களை அணிகிருர்கள். நாரீகத்தின் விளைவாக மற்றவர்களைப்போன்று ஆடை அணிய ஆரம்பித்துவிட்டனர். ஆண்களைக் காட்டிலும் பெண்கள் நவநாரீக ஆடை

அணிவதில் மிகுந்த விருப்பமுள்ளவர்களாக உள்ளனர்.

தோடர்கள் குடிசை கட்டிக்கொண்டு வாழுமிடத்திற்கு 'மந்து' என்று பெயர். இஃது தமிழ்ச் சொல்லான மந்தையினின்றும் பிறந்திருக்கலாமென சிலர் கூறுகின்றனர். எல்லா மந்திலும் எருமைகட்கென எருமைத் தொழுவமும் மற்றும் கோயிலும் உள்ளது. அக்கோயிலும் வீட்டைப்போன்ற அமைப்பு உடையதாகும். ஒவ்வொரு கோயிலுக்கும் பூசாரியொருவர் இருப்பார். தோடாப்பெண்கள் எக்காரணத்தைக் கொண்டும் கோயிலுக்கோ அல்லது கோயில் பக்கத்திலோ செல்லக்கூடாது. இத்தகைய வழக்கம் ஆப்பிரிக்காவிலுள்ள கஃபீர்களிடையேயும் உண்டு. தோடர்களது குடிசைகள் வட்டவடிமாகயிருக்கிறது. மூங்கிலால் பின்னி கூறை வேயப்பட்டிருக்கிறது. சிறு வாசலொன்று உண்டு. அனைவரும் குனிந்துதான் செல்லவேண்டும். வீட்டின் வலதுபுறத்தில் தூங்குவதற்கென பெரிய திண்ணையொன்று உள்ளது. இடதுபுற மூலையில் அடுப்பு உள்ளது. வாசலுக்கு நேராக வீட்டுச்சாமான்களையும் பாத்திரங்களையும் அழகாக அடுக்கிவைத்துள்ளனர். வீட்டின் நடுவில் தான்யங்களைக் குத்துவதற்கென குழியொன்று உளது. எருமை கொம்பு போன்ற வடிவத்தை அவர்களது வீட்டினுள் திறையக் காணலாம். தற்பொழுது அரசியலார் அவர்கட்கு நவீனமுறையில் வீடுகள் கட்டி கொடுத்துள்ளனர்.

மந்திலுள்ள அனைவரும் ஒரே குடும்பமாக வாழ்கிறார்கள். சைவ உணவுதான் உண்கிறார்கள். கேப்பை, தினை முதலியவற்றையும் அரிசியையும் பயன்படுத்துகிறார்கள். எல்லாத் தோடர்களிடமும் பொடியைக் காணலாம். தற்பொழுது சிலர் குடிப்பழக்கத்தை மேற்கொண்டதால் அசைவ உணவும் உண்கிறார்கள். விழாக்களின் போதும் சமயச் சடங்கின் போதும் ஆண், பெண் இருபாலரும் குடிக்கின்றனர். மார்கெட்டில் கிடைக்கும் அனைத்துப் பாத்திர வகைகளையும் அவர்களது வீட்டில் காணலாம். எந்தத் தோடா மந்துக்குச் சென்றாலும் காபியுடன் நம்மை வரவேற்பார்கள். அவர்கள் தரும் காப்பியைக் குடித்தால்தான் அவர்கள் மனநிறைவு அடைவார்கள். ஆண், பெண் இருபாலரும் உடம்பில் வெண்ணெய் பூசிக் கொள்கிறார்கள். பெண்கள் வெண்ணெயைத் தலையில் தடவி, மயிரை சுருள் சுருளாக பின்னி கோதிவிட்டிருக்கும் அழகே தனி அழகாகும். சமயச் சடங்குகளில் குச்சியை உபயோகப்படுத்தி நெருப்பு உண்டாக்குகிறார்கள். மற்ற காரியங்களுக்கு தீப்பெட்டியைப் பயன்படுத்துகிறார்கள். பால் கடைவதற்கு மத்துகளையும் பால், வெண்ணெய், நெய் முதலியவற்றை வைக்க தனித் தனி சட்டிகளையும் வைத்துக்கொள்வார்கள். தற்பொழுதுதான் தோடாப் பையன்களும் பெண்களும் படிக்க ஆரம்பித்துள்ளனர். பீட்டர் ராஜ் என்னும் மாணவர் பத்தாவது வகுப்பு படிக்கிறார். அவரது சகோதரி கூடா மல்லி பள்ளியிறுதி வகுப்புவரை படித்திருக்கிறார். அவர்களுக்கென நீர்க்காச்சி மந்தில் பள்ளிக்கூடம் ஒன்றுமுளது. குமாரி பில் ஜெய்ன் அவர்களது இடைவிடாத பணியினால் தோடர்களது மக்கட்தொகை பெருகியுள்ளது.

வயது முதிர்ந்த பெரியவர்களைக் கண்டால் பெண்கள் மண்டியிட்டு வணங்கவேண்டும். அவர் தனது பாதத்தைத் தூக்கி அப்பெண்ணின் நெற்றியில் வைத்து வாழ்த்துவார். இதனை அவர்களது மொழியில் 'கோல் மீன் விடுத்' என்று கூறுவர். இது அவர்களது விசேஷ வணக்கமாகும். தோடா அல்லாத மற்றவர்களை கைகூப்பி வணக்கம் செய்கிறார்கள்.

பூசாரிகளை நியமித்தல், திருமணம் விவாகரத்து, மாற்றான் மனைவியை அழைத்துச் சென்றது போன்ற விவகாரங்களை 'நோய்ம்' எனும் பஞ்சாயத்து விசாரித்துத் தீர்ப்பு வழங்குகிறது. அபராதம் எருமையாக விதிக்கப்படு

கிறது. தற்பொழுது தோடர்களுக்கு 'நீலகிரி தொதுவர் சங்கம்' என்ற அமைப்புள்ளது. அச்சங்கத்தில் தோடர்களது முன்னேற்றம் கூட்டுறவு சங்கங்களில் பங்கு கொள்ளுதல், குறைகளை அரசாங்கத்திற்கு எடுத்துரைப்பது போன்றவற்றை விவாதித்து அரசிடம் முறையிட்டு நிவாரணமும் பெறுகிறார்கள்.

தோடர்களது வாழ்க்கை முழுக்க முழுக்க எருமையைச் சுற்றியே சுழல்கிறது. அவர்களது சமயச் சடங்கு அனைத்திலும் எருமைக்கே அதிமுக்கியத்துவம் கொடுக்கின்றனர், தெய்வத்திற்கு அடுத்தபடியாக எருமையைத்தான் தெய்வமாக வழிபடுகிறார்கள். எனவேதான் எருமைகளைப் புனிதத்தன்மை வாய்ந்தவை (sacred buffaloes) என்றும் சாதாரணமான எருமைகள் (ordinary buffaloes) என்றும் இரு பிரிவாகப் பிரிக்கின்றனர். எல்லா மந்திலும் எருமைகளுக்கெனத் தனியிடமும் எருமைக் கன்றுகளுக்கு தனியிடமும் இருப்பதைக் காண்கிறோம். எருமைகளைப் பருவகாலத்திற்கேற்றவாறு வெவ்வேறு இடங்களுக்குச் சென்று மேய்க்கின்றனர். எருமையை வைத்துத்தான் அவர்களது செல்வம் கணக்கிடப்படுகிறது. சங்க இலக்கியத்திலும் 'மாடு' என்பதற்கு 'செல்வம்' என்ற பொருள் இருப்பது இங்குகள் குறிப்பிடத்தக்கதாகும். தோடர் மொழியில் எருமையைப் பற்றியே நூற்றுக்கு அதிகமான சொற்கள் உள. மானிடவியலாளர்கள் (Anthropologist) கூறுவதுபோல, மொழி, பண்பாட்டின் வளர்ச்சிக் கருவி என்பதை அந்தந்த மொழியினின்றும் நன்கு தெரிந்து கொள்ளலாம். அக்காலத்தில் தோடர்கட்கு விவசாயத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாது. படகர் பழங்குடிமக்கள்தான் இவர்கட்கு வேண்டிய அனைத்து உணவுப்பொருட்களையும் கொடுப்பர். படகர்கள் தோடர்கட்கு 'குது' அளிப்பதுமுண்டு. கோத்தர்கள் விவசாயத்திலும் கைத்தொழிலும் பெரும் பங்கு பெறுகின்றனர். தோடர்களது ஈமச்சடங்கில் பறை முழக்குவதும் இவர்களது தொழிலேயாகும். ஈமச்சடங்கில் பலியிடப்படும் எருமைகளை கோத்தர்கட்கு கொடுப்பர். கோத்தர்கள் தற்பொழுது எல்லாத்துறையிலும் முன்னேறிவிட்டனர்[6]. அரசியலார் தோடர்கட்கு நிலங்கள் அளித்து விவசாயம் செய்வதற்கு வேண்டிய அனைத்து வசதிகளும் செய்துகொடுக்கின்றனர். ஆனால் தோடர்கள் விவசாயம் செய்வதில்லை. படகர்கட்கும் கன்னடியர்கட்கும் நிலங்களை குத்தகைக்கு விட்டு, அதன்மூலம் கிடைக்கும் பணத்தைக்கொண்டு வாழ்க்கையை கஷ்டமின்றி நடத்துகின்றனர். பெனேய் போன்ற தோடர் ஒருவர் காபி, தேயிலை எஸ்டேட் வைத்துள்ளார். உருளைக் கிழங்கு, முட்டைக்கோஸ் முதலியவற்றையும் பயிரிடுகிறார். இவரைப்போன்று எல்லாத் தோடர்களும் உழைத்தால், பொருளாதாரத் துறையில் நிச்சயம் முன்னேறுவார்கள் என்பதில் கொஞ்சமேனும் ஐயமில்லை. ஆனால், முயற்சி செய்தால் தோடர்களை விவசாயப் பணியில் ஈடுபாடு கொள்ளச் செய்யலாம். ஏனென்றால் விவசாயத்தைக் காட்டிலும் மந்தைவாழ்வில்தான் கஷ்டங்கள் அதிகம். விவசாயத்தினின்றுதான் மந்தை வாழ்வே பிறந்தது எனலாம். உலக வரலாற்றுப் பேரறிஞன் ஆர்னல்டு டாயன்பி (Arnold Toynbee) யின் கருத்து இங்கு குறிப்பிடத் தக்கதாகும்[7]. எனவே அரசியலார் சிறிது முயற்சி செய்யின் நல்ல பலன் கிடைக்குமென நம்புகிறேன்.

தோடர்கள் ஆவியுலகக் கோட்பாட்டில் (animist) நம்பிக்கையுடையவர்கள். நன்னிமித்தங்களில் ஓரளவுதான் நாட்டம் செலுத்தினும், கடவுள் நம்பிக்கையில் ஆழ்ந்த பற்றுடையவர்கள். தோடர்களது வாழ்வில் சடங்குகள் ஒன்றறக் கலந்துவிட்டன எனலாம். பண்ணையில் பால் திருடுதல், பகலில் உடலுறவு கொண்டபிறகு பண்ணையில் நுழைதல் முதலியவற்றைத்தான் பாவங்களாகக் கருதுகின்றனர். ஒருவன் ஒரு மந்திற்குச் சென்றால், முதலில் கோயிலுக்குச் சென்று வழிபடுகிறான். தோடர் தெய்வங்களது பெயரும் சுமேரியர் தெய்வங்களது பெயரும்



ஒன்ருகக் காணப்படுவதால் இவர்கள் சுமேரியா இனத்தைச் சார்ந்தவர்களாக இருப்பார்கள் எனச்சிலர் கருதுகிருர்கள். கிறிஸ்தவர்களாக மாறிய தோடர்கள் பழங்குடிப் பழக்கவழக்கங்களை அடியோடு கைவிட்டு விட்டனர். மந்தை மேய்த்து வாழும் பழங்குடி மக்களாதலால் அவர்களது மதம் எருமையுடனும் பாற்பண்ணையுடனும் ஒன்றரக் கலந்து விட்டது எனலாம். புனித எருமையைப் பால்கறத்தல், கடைதல், நெய்உருக்கல் போன்றவைகளே தோடா மதத்தை உருவாக்குகின்றது எல்லாம். எல்லா மந்திலும் கோயில் உண்டு. அக்கோயிலுக்கென பூசாரி உண்டு அவர் திருமணமானவராகயிருப்பின் மனைவியை தனது சகோதரனிடம் விட்டு விட்டு இப்பணியைமேற்கொள்ள வேண்டும் தானேசமைத்து உண்பார். புனித எருமையைப் பால்கறத்தல் போன்ற காரியங்களை இவரே கவனிப்பார். எப்பொழுதும் கறுப்புத்துணி உடுத்தியிருப்பார். தீ பால்பண்ணை தான் மிகவும் புனிதமானவையாகும். அஃது தற்பொழுது செயலற்று இருக்கிறது. முத்த நாடு மந்திலுள்ள போவ் (பெரியகோவிலுக்கு) சென்றிருந்தேன். டிசம்பர் மாதத்தில் நடைபெற்ற திருவிழாவில் நானும் கலிபோர்னியா பல்கலைக் கழக மானிடவியல் பேராசிரியர் டாக்டர் மாண்டல்பர்ம் (Dr.D. (Mandelbaum, Professor of Anthropology) அவர்களும் கலந்து கொண்டோம். இக்கோயில் மற்ற கோயிலினின்றும் வேறுபட்ட அமைப்பினைக் கொண்டதாகும். இத்திருவிழாவின் போது சாமியாடியவர் தூயமலையாள மொழியில் பேசியதைக் கேட்டோம். அவர்களை வினவியபொழுது அதற்குரிய காரணங்களைக் கூற மறுத்துவிட்டனர். பூசாரிகள் பல கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு நடக்க வேண்டும். தேக்குறிச்சி போன்ற தெய்வம் தான் தோடர்களையும் எருமைகளையும் படைத்ததாக நம்புகிருர்கள். மறுஉலகத்திலும் நம்பிக்கை கொள்கிருர்கள். எனவே தான் ஈமச்சடங்கில் பல எருமைகளைக் கொல்கின்றனர். சூரியன், சந்திரன், நெருப்பு முதலியவற்றை வணங்குகிருர்கள். ஆனல், நாக வழிபாடு இவர்களிடையே கிடையாது. இயற்கை வழிபாடு தமிழர்களிடையேயும் இருந்ததாக சங்க இலக்கியங்களிலும் சிலம்பிலும் காண்கிருேம். மேலும் தோடர்களிடையே உருவவழிபாடு கிடையாது. இந்துக்களைப்போன்று விழாக்கள் கொண்டாடுவதில்லை. பெண்கள் கோயிலுக்குச் செல்லவோ அல்லது சமயச் சடங்குகளில் கலந்து கொள்ளவோ கூடாது. தோடர்களில் சிலர் நாகூர். காரமடை, மதுரை, இராமேசுவரம், திருப்பதி முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்குச் செல்கின்றனர். சில மந்துகளில் சாயிபாபா படத்தையும் பார்த்தேன். அய்யப்ப சாமிக்கு மாலை போட்டிருந்த ஒருவரையும் பார்த்தேன். 'எம்மதமும் சம்மதமே' என்ற கொள்கையுடையவர்கள் போன்று எல்லாத் தெய்வங்களையும் வணங்குகிருர்கள். டாக்டர் ரிவர்ஸ் (Dr. Rivers) அவர்கள் தோடர் மிகவும் உயர்ந்த நிலையிலிருந்த மதக்கோட்பாட்டுடன் நீலகிரிக்கு வந்திருக்க வேண்டுமென கூறுகிருர். மேலும் அவர் 'தோடர்களது மதம் உண்மையிலேயே நிகழக்கூடிய ஒன்றென்று தோன்றுகிறது[8]. என்றும் குறிப்பிடுகிருர்.

இவர்கள் பேசும் தோடா மொழி திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்ததாகும். எழுத்து மொழி இலக்கியம் கிடையாது. ஆனல் வாய்மொழி இலக்கியங்கள் (oral literature) நிறைய உண்டு. இவர்களால் பல ஆயிரம் வரை எண்ண முடிகிறது. இஃது மொழியின் வளர்ச்சியையும் அம்மொழி பேசும் இன மக்களின் பண்பாட்டு வளர்ச்சியையும் காட்டுகிறது எனலாம். ஏனெனில் சின்ன அந்தமான் தீவில்வாழும் ஒங்கே(onge) பழங்குடி மக்களால் மூன்றுவரை எண்ணமுடிகிறது. மீண்டும் மீண்டும் ஒன்று, இரண்டு, மூன்று என எண்ணுகிருர்கள். இஃது அவர்களது பழமைநிலையைக் காட்டுகிறது[9]. ஜே. ஸார்ட்த் (J. Shortt 1868) போன்ருேர் தோடர்கள் பேசிய மொழி தமிழே என்றும்

தற்பொழுது தமிழும் கன்னடமும் கலந்த மொழியொன்றைப்பேசுகின்றனர்[10] என்றும் கூறுகிறார். டாக்டர் கால்டுவெல், ஸ்மித் போன்றவர்கள் தோடா மொழியிலுள்ள பெரும்பாலான சொற்கள் தமிழோடு நெருங்கிய தொடர்புடையனவாக உள்ளது என்றும் தோடா மொழி திராவிடமொழிகளில் இலக்கியவளம் நிறைந்த தமிழுடன் மிகத் தொடர்பு கொண்டுள்ளது என்றும் குறிப்பிடுகிறார்கள். டாக்டர் ஒப்பெர்ட் (Dr. Oppert) அவர்கள் தோடா மொழி தெலுங்கு மொழியின் கிளைமொழி என்று குறிப்பிடுகிறார். ஆனால், இதற்குரிய சான்றுகளே இல்லை. டாக்டர் ரிவர்ஸ் (1906) அவர்கள் தோடா மொழி மலையாள மொழியின் கிளைமொழி (dialect) என்று கூறுகிறார். மேலும் இவர் தேர்த்தாள் தெவினியாள் என்ற இரு பிரிவினர்க்குமிடையேயுள்ள மொழி வேறுபாட்டையும் (dialectical differences) தனது நூலில் குறிப்பிட்டுள்ளார்[11]. தற்பொழுது இரு பிரிவினரும் எல்லாத் துறைகளிலும் கலந்துறவாட ஆரம்பித்ததினால் வேறுபாடே அதிகமில்லையெனலாம். டாக்டர் ஜி.யு. போப் அவர்கள் தோடா மொழி கன்னடமொழியின் கிளைமொழியென மிகவும் விரிவான கட்டுரையொன்று எழுதியுள்ளார். அக்கட்டுரையில் தோடா மொழிக்கும் கன்னட மொழிக்குமுள்ள ஒற்றுமைகளை விளக்கியுள்ளார்.[12] டாக்டர் மேட்ஜும் தோடா மொழி கன்னடமொழியின் கிளை மொழி என்கிறார். கிரேக்க அரசர் பீட்டர் (Prince Peter of Greece) அவர்கள் சுமேரியா மொழியுடன் தொடர்புபடுத்திக் காட்டுகின்றார். இத்துறையில் டாக்டர் சதாசிவம் அவர்களும் முனைந்துள்ளார்கள். முயற்சியைப் பாராட்டலாமேயன்றி கொள்கையை ஏற்றுக்கொள்வதற்கில்லை. மேலும் படகர்களும் கோத்தர்களும் தோடர்களும் பல நூற்றாண்டுகளாக ஒன்றாகவாழ்ந்தாலும் தோடர் பேசும் மொழியை மற்றவர்களால் எளிதில் புரிந்து கொள்ள முடியவில்லை. தோடா மொழி கோத்த மொழியுடனும் தமிழுடனும் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. இம் மொழியில் ஒருமை, பன்மை வேறுபாடு இருப்பினும் பெரும்பாலும் பயன்படுத்துவதில்லை. தமிழில் இருப்பதைப் போன்று அவன், அவள், அது என்றில்லாமல் எல்லாவற்றிற்கு 'அத்' என்றும் அவர்கள், அவைகள் என்பதற்கு 'அதாம்' என்றும் உள்ளது. திராவிட மொழிகளிலே தோடா மொழியிலும் பிராஹுவியிலும்தான் பால் வேறுபாடு (gender distinction) கிடையாது. பிராஹுவி மொழியில் இரானிய மொழியின் செல்வாக்குக் காரணமாக பால்பாகுபாடு இல்லை. தோடா மொழியில் பால்பாகுபாடு இல்லாமை குறித்து தெளிவாக இன்னும் ஆராயப்படவில்லை[13]. 'கொரியன்', ஜப்பானியமொழி, வங்கமொழி, ஒரியா, மைதுலைலாட்டிக்போன்ற மொழிகளில் எவ்வகையான பால்பாகுபாடும் இல்லை. சிலமொழிகளில் ஒரே சொல் சந்தர்ப்பத்திற்கேற்ப ஆண், பெண் பால்களைக் காட்டுகின்றதேயன்றி ஒரு குறிப்பிட்ட பாலைக் காட்டுவதில்லை, என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்[14]. இம் மொழியில் நிகழ் காலத்திற்கும் எதிர்காலத்திற்கும் வேறுபாடு இல்லை. எமனோ போன்றோரின் ஆய்வினின்றும் இக்கட்டுரையாசிரியரின் ஆய்வினின்றும் தோடா மொழி எம்மொழியின் கிளைமொழியுமன்று; அஃதொரு தனி திராவிட மொழி எனத் தெளிவாகிறது[15].

பெண்கள் பருவமடைந்தவுடன் தனிக்குடிசையில் வைக்கின்றனர். அமாவாசைக்குப் பின், அவளைக் குளிக்கச் செய்து, தீட்டுக் களித்து வீட்டிற்கு அழைத்து வருகிறார்கள். அன்று விருந்து நடைபெறும். பெண்கள் பருவமடைவதற்கு முன்பே உடல் திண்மை வாய்ந்த ஒருவன், அப்பெண்ணுடன் உடலுறவு கொள்வான். அவர்களது சம்பிரதாயப்படி இஃது நடந்தாகவேண்டும். அவன்அப் பெண்ணை மணந்தாலும் மணக்கலாம்; மணக்

காமலும் போகலாம். சமயச் சடங்குகளில் பெரியகல்லைத் தூக்கி தனது உடல் வலிமையைக் காட்டுகின்றான். இவனை 'கஸ் தூக்ஒள்' எனக் கூறுகிறார்கள். தமிழர்கள் ஜல்லிக்கட்டில் மாட்டைப் பிடித்து வீரத்தைக் காட்டுவதுபோல என இதனைக் கூறலாம். பருவமடைவதற்குமுன் உடலுறவு கொள்வதில் சில தீமைகள் இருக்கின்றன என உடலியல் நிபுணர்கள் கூறுகின்றார்கள். இப்பழக்கம் இன்று மறைந்து வருகின்றது என்றாலும் முற்றிலும் மறைந்து விட்டதாகக்கூற முடியாது.

தோடர்களிடையே திருமணம் மிகவும் எளிமையாக நடத்தப்படுகிறது. மணமகன் மணமகளுக்கு கேஞ்ஸ் செடியை அளிப்பான். அதைப் பெற்றுக் கொண்டு குடிசைக்கு முன்னால் நிற்பார்கள். பெரியவர்கள் தண்ணீரும் பூவும் வைத்திருப்பார்கள். அதை எடுத்துக் கொண்டு மணமக்கள் இருவரும் குடிசைக்குள் நுழைவார்கள். அன்று விருந்தும் நடனமும் நடைபெறும். இதையடுத்து பெண் கற்பம் தரித்து ஏழாவதுமாதம் நடைபெறும் வில்லம்புச் சடங்கைத்தான் விமரிசையாக நடத்துகிறார்கள். பெண் குழந்தைபிறந்தவுடனேயே அக்குழந்தைக்கான பையன் ஒருவனை நியமித்து விடுகிறார்கள். அப்பையன் அப்பெண்ணுக்கு வருடா வருடம் துணிகொடுக்க வேண்டும். பெண் வீட்டில் யாரேனும் இறந்துவிட்டால் பலியிடுவதற்கு எருமைகளும் கொடுக்க வேண்டும். அப்பெண் பருவமடைந்தவுடன் அப்பையனைத் திருமணம் செய்யலாம், அல்லது அப்பெண்ணுக்குப் பிடித்தவாலிபனைக் காதல் செய்துதிருமணம் செய்வதுமுண்டு. இளம் வயதில் நிச்சயித்தவர்களைத்தான் திருமணம் செய்யவேண்டும் என்ற கட்டுப்பாடு இல்லை. இளம் வயதில் நிச்சயிக்கப்பட்ட பெண் மற்றொருவனை மணந்து கொண்டால், மணந்தவன் பழைய கணவனுக்கு எருமைகள் கொடுக்கவேண்டும். அதனை "தெற் இர்" என்பர். பால்யவிவாகததில் பெண்ணுக்குத் துணி கொடுத்து வருங்கால மாமனாரை வணங்குவதுடன் முடிகிறது.

பெண் கர்ப்பமடைந்த ஏழாவது மாதம் 'வில்லம்புச் சடங்கு' நடத்துகிறார்கள். அச் சடங்கில் வில் அளிக்கின்றவனே அப்பெண்ணுக்கு மரபுப்படி கணவனாகிறான். அவனைக் கட்டிய கணவனும் இச் சடங்கில் வில் அளிக்கலாம். கணவனுடன் பிறந்த சகோதரர்களும் அப்பெண்ணுக்கு வில் தரலாம். அக் குழந்தைக்கும் அதன்பின் பிறக்கும் குழந்தைக்கும் அவனே தந்தையாகிறான். மற்றவர் அப் பெண்ணுக்கு வில்லம்புச் சடங்கு நடத்தும் வரை, இவனே அக்குழந்தைகட்கு மரபுப்படி தந்தையாகிறான். அமாவாசையன்று இச்சடங்கு நடைபெறுகிறது. அச் சடங்கன்று தோடர்களனைவரும் மந்தில் கூடுகிறார்கள். மந்துக்கருகிலுள்ள நாவல் மரத்திற்கருகில் அனைவரும் கூடுகிறார்கள். நாவல் மரத்தில் ஒரு மாடம் செய்து நெய்யிட்டு விளக்கேற்றுகிறார்கள். தானியமும் தேனும் படைக்கின்றனர். சடங்கு ஆரம்பிப்பதற்கு முன், அம் மணமக்கள் அனைவரது காலிலும் விழுந்து வணங்குகிறார்கள். பெரியோர்கள் தங்களது காலைத்தூக்கி அவர்களது நெற்றியில் வைத்து வாழ்த்தி, பணமும் கொடுக்கிறார்கள். பின்பு இருவரும் விளக்குக்கு முன் அமர்கிறார்கள். மாப்பிள்ளை ஒரு மரக்கிளையால் வில்லம்பு செய்து பெண்ணுக்கு அளிக்கிறார். கணவனும் மனைவியும் விளக்கையே அரைமணி நேரத்திற்கு மேலாக உற்று நோக்குகிறார்கள். பின்பு தோடர்களனைவரும் வட்டமாக நின்று கொண்டு நடனமாடுகிறார்கள். விழா விருந்துடன் முடிவடைகிறது. முதல் பிரசவத்தின் போது இப்படிப்பட்ட சடங்கு நடைபெறும். அதற்குப் பின்பு கணவன் மாறினால், சடங்கு நடத்தப்படுகிறது. இவ்வாறாக, ஒரு மனிதன் இறந்தபின்பும் பல குழந்தைகட்குத் தந்தையாகிறான். வில் சடங்கின்றி பிறக்கும் குழந்தைகளை அவமானச் சின்னமாகக் கருதுகிறார்கள். அப்படிப்பட்ட குழந்தைகளை 'பொட்மொஹ்' என்கிறார்கள். பிள்ளைப்பேறு

வீட்டில்தான் நடைபெறுகிறது. குழந்தை பிறந்த மூன்றுவதுநாள் முன்பு சென்ற (5-வது மாதத்தில் சென்ற) அதே குடிசைக்குச் சென்று அமாவாசை வரை தங்கவேண்டும். தற்பொழுது இப்பழக்கங்களெல்லாம் ஓரளவு குறைந்து வருகின்றன. ஆண் குழந்தைகட்கு மலை, நதி, மந்து ஆகியவற்றின்பெயர்களையும் பெண் குழந்தைகட்கு பூவ் என்று முடியும் பெயர்களையும் வைக்கிறார்கள்.

அகமண முறையைப் (endogamous) பின்பற்றினாலும், பல பெண்களை மணத்ததலும், பல கணவன்மார்களைப் பெற்றிருத்தலும், தோடா பழங்குடிகளிடையே உண்டு. ஒரே பெண் பல ஆண்களை மணந்து கொள்ளும் வழக்கம் (polyandary) தியன், தோடா, கோத்தர், காசி, ஜோன்ஸாரி-பாவா பழங்குடி மக்களிடையேயும் உள்ளது. பல சகோதரர்கள் ஒரே மனைவியுடன் வாழும் வழக்கம் தோடர்களிடையேயும் காசிப் பழங்குடிகளிடையேயும் ஜோன்ஸாரி பாவாக்களிடையேயும் காணலாம். இதனை 'சகோதரப்பல்கணவமணம்' எனக்கூறுவர். தோடர்களிடையே ஒரு பெண்ணின் கணவன்மார்கள னைவரும் சொந்தச் சகோதரர்களாக இருக்க வேண்டியதில்லை. ஒரே கால் வழியைச் சார்ந்தவர்களாகயிருக்கலாம்[16]. பொதுவாக ஒரு பெண் ஒருவனைத் திருமணம் செய்து கொண்டால் 'அவள்' அவனுக்கு மட்டுமின்றி அவனுடன் பிறந்த சகோதரர்கட்கும் மனைவியாகிறாள். ஏழாவது மாதம் வில் சடங்கு நடத்துகிறவன் பிறக்கும் குழந்தைக்கு மரபுப்படி தந்தையாகிறான். ஒரு சகோதரன் மனைவியுடன் உறவு கொண்டிருக்கும்பொழுது, மற்ற சகோதரர்கள் உள்ளே நுழையாமலிருக்க கதவுக்கருகில் ஊன்றுகோல் வைத்துச் செல்கிறான். கதவின்மீது மலர் ஒன்றை வைத்துச் செல்வதும் உண்டு. ஒவ்வொரு சகோதரர்களும் தனித்தனியாகப் பெண்களை மணந்து கொண்டாலும், அவர்களனைவரும் பொதுவாகவே மணவாழ்க்கையில் ஈடுபடுவர். காதலன் தனக்கு விருப்பமான பெண்ணிடம் சென்று வருவதுண்டு. திருமணத்திற்கு முன்பும் பின்பும் உடலுறவு கொள்வது சாதாரண விஷயமாகக் கருதப்படுகிறது. ஒரு பெண் பல கணவன்மார்களைத் தவிர மற்றவர்களிடமும் தொடர்புகொள்வதுண்டு. மலட்டுத் தனத்துக்காகவோ அல்லது ஒழுக்கக் கேட்டிற்காகவோ விவாகரத்து செய்வதில்லை. ஒரு பெண் மற்றொருவனை மணந்துகொண்டால் பழைய கணவனுக்கு புதுக்கணவன் எருமைகளை கொடுக்கவேண்டும். ஒருவர் மற்றொருவருடைய மனைவியை விலைகொடுத்து வாங்குவதுமுண்டு. தேர்த்தாள் பிரிவைச் சார்ந்தவர்கள் தெவிளியாள்பெண்களைக்காமக்கிழத்திகளாக வைத்துக்கொள்கிறார்கள். தெவிளியாளைச் சார்ந்தவர்கள் தேர்த்தாள்பெண்களைக்காமக்கிழத்தியராக வைத்துக் கொள்கிறார்கள். அப்பெண்களது கணவன்மாரின் சம்மதம் பெற்று, பூத்குளியை அன்பளிப்பாகக் கொடுத்து அடிக்கடி சென்றுவருவதும் உண்டு. ஏறத்தாழ தோடா பெண்கள் குறைந்தபட்சம் நான்கு முறையாவது திருமணம் செய்கிறார்கள். ஒருவர் மனைவியை மற்றவர் அழைத்துச் சென்று, மறுமணம் செய்துகொள்கிற நிகழ்ச்சிகளை சர்வ சாதாரணமாகக் காணலாம். இவ்விஷயத்தில் பெண்கள் சுதந்திரமாகவே வாழ்கிறார்கள். தவறான ஒழுக்கம் என்ற கருத்து அவர்களிடையேயிருப்பதாகத் தெரியவில்லை. 'விபச்சாரம் தவறான ஒழுக்கம் என்பதற்குப் பதிலாக மனைவியை விருப்பமின்றியோ உட்பகையுடனோ அளிப்பதுதான் தவறான ஒழுக்கம்' என்று கருதப்படுகிறது.

தோடர்கள் இறந்தவர்களை எரிக்கின்றார்கள். தோடர்கள் ஈமச்சடங்கிற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கின்றனர். அவர்கள் இரண்டுவிதச் சடங்குகளை மேற்கொள்கிறார்கள். இறந்த அன்று செய்யும் சடங்கினை பச்சைச் சாவு (எத்வொய் நோள் கையோடர்)என்றும் அதற்கடுத்து செய்யும் சடங்கினை பால் சாவு (மற்வெய்நோள் கெயோடர்) என்றும்

கூறுவர். ஒருவர் இறந்தவுடன் உறவினர்கள் அனைவருக்கும் சொல்லியனுப்புவார்கள். பெரும்பாலும் இறந்த மறுநாள் (நல்ல நாளாகப் பார்த்து) எடுக்கிறார்கள். பிணத்தைப் புதுத் துணியால் போர்த்தி அணிகலன்களை அணிவித்து பாடையில் வைக்கிறார்கள். முற்காலத்தில் பல நாட்களுக்கு அப்படியே பிணத்தை வைத்திருந்தார்கள்[17]. அப்பிணத்தை நான்குபேர் தூக்கிச் செல்ல, அவர்களைத் தொடர்ந்து மற்றவர்கள் செல்கிறார்கள். பிணத்தை எரிக்குமிடத்தில் வைத்து அதைச்சுமந்துகொண்டு அனைவரும் விம்மியழுகிறார்கள். பிணத்தின் மீது தானியத்தைத் தூவுகிறார்கள். இதற்கிடையில் பலியிடுவதற்குரிய எருமையை இளைஞர்கள் இழுத்து வருகிறார்கள். பிணத்துடன் அவர் பயன்படுத்திய பொருட்களையும் வைக்கிறார்கள். இறந்தவரின் நெருங்கிய உறவினரொருவர் இறந்தவரது தலைமுடியை கொஞ்சம் வெட்டி பத்திரப்படுத்திக் கொள்கிறார். பிணத்திற்கு உறவினர் தீ மூட்டுகிறார்கள். பிணம் எரியும் வரை விம்மியழுதுகொண்டிருப்பர். எரிந்த பிறகு தண்ணீர்விட்டு அணைத்து ஏதேனும் எலும்புத்துண்டு கிடந்தால் அதையும் பத்திரப்படுத்திக் கொள்கிறார்கள். சிலர் மொட்டையடிப்பதுமுண்டு. இறந்தவீட்டார் வேறு மந்துக்கே செல்வதும் உண்டு. சில உணவு விலக்குகளையும் (Food Taboos) மேற்கொள்கிறார்கள். ஈமச்சடங்கில் கலந்து கொண்ட அனைவரும் குளித்துத்தான் வீட்டிற்குள் நுழைய வேண்டும்.

இரண்டாவது ஈமச்சடங்கில் முன்னர் செய்த சிலவற்றைத் திரும்பவும் செய்கிறார்கள். எருமைகளைப் பலியிடுகிறார்கள். இறந்தவன் செல்வந்தனாயிருப்பின் எருமை மந்தையையே பலியிடுகிறார்கள். பலியிட்ட எருமையை கோத்தர்கட்குக் கொடுக்கிறார்கள். எருமை பலியிடுவதை அரசாங்கம் தடைசெய்தும் இப் பழக்கம் முற்றிலும் மறைந்துவிடவில்லை. முன்பு வெட்டிய மயிர், சாம்பல் முதலியவற்றைப் புதைத்து விடுகின்றனர். அங்குள்ள தோடர்கட்குக் பொரியும் கருப்பட்டிக் காபியும் கொடுக்கிறார்கள். இறந்தவரின் மனைவி சில நாட்களுக்கு முக்காடு போட்டுக் கொண்டிருப்பாள். இவற்றைப் புதைத்த இடத்தை மும்முறை வலம்வந்து புதிய மட்குடத்தைப் போட்டு உடைக்கிறார்கள். கொன்ற எருமையை உறவினர்கள் அனைவரும் அழுது புலம்பி முத்தமிடுகிறார்கள். ஆண்கள் வட்டமாக நின்றுகொண்டு நடனமாடுகிறார்கள். பெண் உறவினர்கள் இறந்தவரை நினைத்து அழுது புலம்புகின்றனர். சிலர் இறந்தவர்மீது பாட்டுப் பாடுகிறார்கள். எருமைகளைப் பலியிடாவிட்டால் இறந்தவரின் ஆவி இவ்வுலகத்தையே சுற்றும் என்றும் எருமைகளைப் பலியிட்டால் அவ்வாவி மறுமை உலகத்திற்குச் செல்லுமென்றும் நம்புகிறார்கள். தோடர்கள் ஈமச்சடங்கில் எருமையைப் பலியிடுவதுபோல சித்தியர்கள் குதிரையைப் பலியிடுவது இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

அவர்களது தனித்தன்மை எவ்விதத்திலும் பாதிக்கப்படாத முறையில் சமூக முன்னேற்றம் செய்து, பாற்பண்ணை முதலியவற்றை ஏற்படுத்திப் பொருளாதார வளர்ச்சிக்கு வழி வகுக்க வேண்டும்.

# மேற்கோள்களும் ஆதாரங்களும்.


1 The Statesman, Calcutta 13, 6th June, 1966.

2 Lewis Rice, Epigraphica Carnatica, vii, Ins.38

3 B. S, Wards, Manual of Nilagiri District, 1880

4 S. Sakthivel, Nilagiri Todas, Kanaiyazhi, New Delhi-5, 1968.

5 Prince Peter of Greece, 1951, possible sumerian survivals in Toda ritual, Bulletin of the Madras Govt. Museum Vi, 1, Madras.

6 G. Subbiah, An Introduction to Kotas, Centmil, Sep. 1969.

7 Arnold Toynbee, A Study of History, page 168.

Nomadism displays a superiority in several ways. In the first place domestication of animals is obviously a higher art than the domestication of plants inasmuch as it is a triumph of human art and will over a less tractable material. The shepherd is greater virtuous than the husbandman. Nomad's life is, indeed a triumph of human skill. He managed to live off coarse grasses that he cannot eat himself, transforming them into milk and flesh of animals and in order to find subsistence for his cattle in season and out of season from the natural vegetation of the bare parsimonious steppe he has to adopt his life and movements with meticulous accuracy to a seasonable time table.

8 Murdock, Our Primitive Contemporaries p. 124 W. H. R, Rivers 'The Todas'

9 S. Sakthivel, The Onge of Little Andaman-Centamil 1968

10 Dr. Shrott, An account of tribe on the Nilagiris. "The language of the tribe on the Nilagiris is unmistakably Tamil although what is now speken is a mixed dialect being a jargon Tamil and canarese".

11 W.H-R. Rivers, The Todas, Page

12 W. E. Marshall, A bhrenology Todas (1873) Dr. G. U. Pope of the grammar of the Toda

13 M. B. Emeneau, Brahui and Grammar Page 56.

14 Dr. S. Agesthialingom, Grammatical Categories Centamil 1965, Page 237.

15 M. B. Emeneau, Todas, A. Dravidian Language TPs, 1957. 27-34

16. D. N. Majumdar & T. N. Madan, An Introduction to Social Anthroplogy, Page 84.

17. J. Short, An accunt of the tribes on the Nilagiris, 1868, PP. 12-16

# நரிக்குறவர்களின் வாழ்க்கை முறை

கோ சீனுவாசவர்மா M.A., Ph.D.

[நம் நாட்டில் பிற பண்பாட்டையுடைய சில இனக்குழுக்கள் (Tribal groups) உள்ளன. மானிடவியலாரைவிட மொழியியலாரே இக்குழுக்களைப் பற்றி ஆராய்கின்றனர். இந்த இதழில் மட்டும் மூன்று மொழியியல் ஆராய்ச்சியாளர்கள் தாம் ஆராயும் மொழி பேசும் மக்களது வாழ்க்கைமுறை பற்றி ஆராய்ந்துள்ளனர். தற்காலப் பண்பாட்டு, பொருளாதார ஊடுருவலைப்பற்றித் தனியாக இனி மேல்தான் ஆராயவேண்டும். இவ்விதழில் வெளியாகும் ஆய்வுக்கட்டுரைகள், ஆரம்ப ஆய்வுமுயற்சிகள். இதற்குமுன் இத்துறையில் விஞ்ஞானபூர்வமான உற்றுநோக்குக் கட்டுரைகள் அதிகமாக வெளியிடப்படவில்லை. இனக்குக்குழுக்களை (Tribes) ஆராய்வதுதான் மானிடவியல் ஆராய்ச்சியின் எல்லை யென்ற கருத்து இன்று பரவுகிறது. இது தவறான தாகும். இனக்குழு மாறி புதிய வளர்ச்சிபெற்ற சமுதாயத்தில் உறுப்பாகும். வரலாற்று ரீதியாகத் தற்கால சமுதாயத்தின் உறுப்புக்களையும் இவற்றின் நடைமுறைப் பண்பாட்டையும் அறியவேண்டுவது அவசியமாகும்.

இவ்விதழில், நரிக்குறவர், கோதர், தோதவர் ஆகிய மூன்று இனக்குழுமக்களின் வாழ்க்கைமுறை பற்றிக் கட்டுரைகள் வெளியாகின்றன.

கோடர்களைப்பற்றி எழுதியவர் மானிடவியல் ஆராய்ச்சியாளர் சக்திவேல் அவர்கள். நரிக்குறவர்களைப்பற்றி எழுதியவர் டாக்டர் சீனிவாசவர்மா. குடவர்களைப்பற்றி எழுதியவர் R. பாலகிருஷ்ணன். பின்னவர் இருவரும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் ஆராய்ச்சிப்பணியிலீடுபட்டிருக்கிறார்கள்.

— ஆசிரியர்]

தமிழகத்தில் வாழ்ந்துவருகின்ற நரிக்குறவர்கள் நாகரீகவளர்ச்சியடையாத பழங்குடிமக்கள். பிறமாநிலங்களிலும் இவர்கள் காணப்படுகின்றனர். 'வாக்ரி' என்றபெயரில் நாடோடிகளாக வாழும் மக்கள் இவர்கள். தமிழ்நாட்டில்வாழும் ஏனைய பழங்குடிமக்களுக்கும், நரிக்குறவர்கட்கும் மிக்க வேறுபாடுகள் உள்ளன.

நரிக்குறவர்கள் குஜராத், மேவார் ஆகிய இடங்களிலிருந்து இங்கு குடியேறியவர்கள் என்பது அவர்களின் மொழியான 'வாக்ரி போலி' யாலும், நாடோடிப் பாடல்கள், வாழ்க்கைமுறை முதலியவற்றாலும் அறியமுடிகிறது. கோத்தர், தோடர், படகர்போன்ற மலைவாழ் பழங்குடிமக்கள் திராவிடமொழிக் குடும்பத்தில் உள்ளடங்கியமொழியினைப் பேசும்பொழுது, நரிக்குறவர்கள்மட்டும் லம்பாடியினைப்போன்ற இந்திய—ஆரிய (Indo Aryan) மொழிக்குடும்பத்தில் உள்ளடங்கிய ஒரு மொழியினைப் பேசுவது அவர்கள் தொன்றுதொட்டுத் தமிழகத்தில்வாழ்ந்தனர் அல்லர்என்பதை வெளிப்படுத்தும். எந்தமாநிலத்தில் வாழ்கின்றார்களோ அம்மாநிலத்தின் மொழியையும் கற்றுக்கொண்டு, இருமொழி பேசும் மக்களாக உள்ளனர். பதின்மூன்று

அல்லது பதினான்காம்நூற்றாண்டில் வந்து குடியேறிய நரிக்குறவர்கள் சமூக அமைப்பு, கலாச்சாரம், பழக்கவழக்கங்களில் தனியே ஒதுங்கிவாழ்கின்றனர். பிறரைத் தன்னின மாக்கவோ, தாம் பிறருடன்கலந்து தம்மை மாற்றிக்கொள்ளவோ முயலவில்லை.

நரிக்குறவர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் ஏதும் கிடைக்கவில்லை. குறவஞ்சி, குறம், சிறுகதைகள், நாடகம், தெருக்கூத்து, சினிமா முதலியவைகளில் பொதுவாக குறவன்- குறத்தியைப்பற்றியும் நாடகம், தெருக்கூத்து, சினிமா முதலியவைகளில் நரிக் குறவன் நரிக்குறத்தியினைப்பற்றியும் நடித்துக் காட்டுகின்றனர். இவைகள் பொதுவாக விவரிக்கின்றனவேயன்றிக் குறிப்பாக விளக்கு வனவல்ல.

தஞ்சை வெள்ளைப்பிள்ளையார் குறவஞ்சி, குற்றாலக்குறவஞ்சி முதலிய நூல்களில் குன்றில்வாழும் குறவனது தொழிலும், குறத்தி குறிசொல்லுதல், பிச்சையெடுத்தல் போன்ற குறிப்புகளும் உள்ளன. குறவன் குருவியையும் வனவிலங்குகளையும் பிடித்து நாட்டில் விற்பான், கழுதை மேய்ப்பான், கூடை முறம் கட்டுவான் என்றும், குறத்தி கூடைமுறம் கட்டுவதுடன், ஊர் ஊராகச் சென்று குறிசொல்லுதல், பச்சைகுத்துதல் போன்ற தொழிலும் செய்வாள் என்றும் உள் ளன. ஆனால் நரிக்குறவர்யாரும் குறிசொன்ன தாகவோ அல்லது இப்பொழுதும் அத் தொழில் அவர்களிடம் உள்ளதாகவோஅறிய முடியவில்லை. நரியினைப்பிடித்து அதன்இறைச் சியைஉண்டு, எஞ்சிய பல், தோல், நகம் முத லியவற்றை விற்பதால் நரிக்குறவன் என்றும், குருவிகளைப் பிடிப்பதால் குருவிக்காரன் என்றும் இம்மக்களைக் குறித்தனர். ஆதலால் இவைகள் காரணப் பெயரேயன்றி இயற் பெயர்அல்ல. நரிக்குறவர்கள் தம்மை 'வாக்ரி' என்றே கூறுகின்றனர். எளிய வாழ்க்கை யினைக் கொண்டுள்ள இம்மக்களிடம் நிறைய நாடோடிப்பாடல்கள் உள்ளன. பாடிமகிழும் வானம்பாடிகளாக வாழ்ந்து, தமது வரலாறு, கடவுள் வழிபாட்டுமுறை, பரையினைத் தமது சந்ததியினருக்குப் பு கின்றனர். எழுதா இலக்கியமான அவர்க நாடோடிப்பாடல்களின் கருத்தும் ஆரிய வர லாற்றில் சிலவும் ஒத்துள்ளன.

நரிக்குறவர்கள் அனைவருமே தாய்க்கட வுள் வழிபாட்டினர். தந்தைவழிக்குடும்ப அமைப்பையும் கூட்டுச்சமூக அமைப்பையும் ஏற்றுக்கொண்டுள்ளனர். சத்த மாதர் என வழங்கப்படும் பிராமணி (பிராமி) நாராயணி (வைஷ்ணவி) மாஹேசுவரி, கௌமாரி, வராகி, உருத்திராணி (மாகாளி) இந்திராணி (மாஹேந்திரி) ஆகிய எழுவரும் வெவ்வேறு பெயரினால் வணங்கப்படுகின்றனர். தலைவ ராக 'தாதாஜி' என்ற கடவுளும், வீரத்திற்கு 'பிம் பர்க்கனுதே'வும் குறிக்கப்படுகின்றனர். 'குணேஷ் ஆக்பாள்' எனப் பிள்ளையாரையும் வீரபத்திரனையும் வழிபடுகின்றனர். இத்தெய் வங்கட்கு ரொட்டி, பொங்கல், தேங்காய் பழம், துபதீப ஆராதனைகளும், நீராட்டுதல் எருமைக்கடா, ஆட்டுக்கடாபோன்ற உயிரை ப்பலியிடுதலும் உண்டு. ஆரம்பத்தில் பூசணிக் காயினை வெட்டிப் பலியிட்டனர். பின்னர் கருங்குரங்கை பலியிடநினைத்து அதைக்காட் டினின்றும் கொணர்ந்தபொழுது கைகூப்பித் தொழுததாம். ஆதலின்ஒரு கையினைமட்டும் வெட்டிக்கொண்டு விட்டுவிட்டனர். அப்பா வத்தைப்போக்க வெள்ளியினால் கைபோன்ற உருவத்தை ஹாஜாஎன்பவன்செய்து வழிபட் டானும். ஒருநாள் தாதாஜி குளத்தில் குளித் துக்கொண்டிருக்கும் பொழுது அழுக்கினால் எருமைசெய்து உலவவிட்டார். அது குளத் தருகில் மேய்ந்து, அந்நீரைக்குடித்து வாழ்ந்து வந்தது. மறுநாள் தாதாஜி வந்தபொழுது அவ்வெருமை பதினான்குமுழம் நீண்டுவளர்ந்த கொம்பினால் விரட்டியதாம். பயந்துபோன தாதாஜி 'சில் பிலி பகாடு' எனும் பறவை வாழும் மலையில் ஒளிந்துகொண்டார். பின்னர் 'வெக்ஸி' (காளி) அந்த எருமையினைக் கொன்றுவிட்டாள். அதன் வழக்கமாக

ம் இவர்கள் எருமைக்கடாவை பலி காளிச்சிலேமீது ரத்தம்பூசுகின்றனர். ாசுரமர்த்தினியின் புராணக்கதையும் நாக்குறவர்களின் நாடோடிப்பாடலும் ஒத்த நிகழ்ச்சியை விவரிக்கின்றன.

மேலும் அவர்களுடைய திருமண உறவு தோடர், கோத்தர், இருளர், பணியர், பாடகர், போன்ற மலே வாழ் மக்களின்றும் மாறுபட்டுக் காணப்படுகிறது. யது வத்த ஆணே பெண்ணே தனித்து வாழக்கூடாது. அவர்களின் வயதுவரம்போ, முன்னேயிருந்த பழக்க வழக்கங்களோ இதற்குத் தடையில்லே. சமூக ஒழுக்கமும், அன்ருடவாழ்வில் ஒருவர் மற்றவரின் உதவியுடனும் வாழவேண்டிய பொருளாதார வாழ்க்கைப் பிரச்சினையை அடிப்படையாகக் கொண்டு அமைத்துக் கொண்டதாகும். அன்பின் அடிப்படையை விடத் தேவையைப் பூர்த்தி செய்வதாக உள்ளது. குழந்தைகளின் திருமணம் விதவை மறுமணம், ஒருவன் பல பெண்டிரை மணத்தல், தன்னிலும் மூத்த பெண்ணே மணத்தல், திருமண உறவுமுறித்தல் போன்ற பலவகை உறவுகள் உண்டு. ஆனல் ஒரு பெண் ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட கணவனேப் பெறும்முறை(polyandry)காணப்படவில்லே. ஒருத்தி கணவனே மணமுறிவு பெற்றுக் கொண்டு வேருெருவனே மணந்து கொள்ளலாம். பேரன் பேத்தி எடுத்த குறவனும் குறத்தியும் கூட மறுமணம் செய்துகொள்ளலாம்.

ஆண்டுதோறும் புதுப்புதுக் குடிசை தைக்கவேண்டும். ஆடவனே இதனேச் செய்யமுடியும். ஒரு வீட்டில் தந்தைவழிக் குடும்ப அமைப்பில் தானும் தன் மனேவியும் சிறுகுழந்தைகளும் மட்டுமே இருக்கமுடியும். ஆதலால் கணவன் இல்லாத ஒருபெண் தன்னுடைய பெற்ருேர்களுடனே அல்லது மருமகனுடனே வாழவேண்டும். அது கூட்டத்தில் ஒழுக்கக் கேட்டிற்கு வழிவகுக்கும். ஆதலால் தனக்கென ஒரு மனேவி அல்லது கணவனே விரும்பி ஏற்றுக்கொள்ள வேண்டியது அவசியமாகிறது. ஏனேய உறவுமுறைகள் அத்துணே நெருக்கத்தையும், பாதுகாப்பிற்கு நம்பிக்கையையும் ஏற்படுத்துவதில்லே. பிள்ளேகள் கூட பத்துப் பனிரண்டு வயதிற்குப்பின் தன்னிச்சையாக வாழத் தொடங்கிவிடுகின்றன. ஆதலால் திருமண உறவு மூலம் ஒருவருக்கு மற்றவர் ஆதரவு தேடிக்கொள்ள வேண்டிய வாழ்க்கை நரிக்குறவரின் குடும்பவாழ்க்கை. ஒரு குடும்பத்தில் நிகழும் எந்த ஒரு நிகழ்ச்சியும் அக்கூட்டத்தில் உள்ள ஏனேய குடும்பத்தையும் சாரும். திருமணமானுலும், வழிபாடானுலும், சாவானுலும் அடுத்தவர்களும் அதற்கிணேந்து செயல்படவேண்டும். பொதுவாக ஒருவர் இறந்து விட்டால் அதே இடத்தில் வாழ விரும்புவதில்லே. பயத்தாலும் இடம் 'ராசியில்லே' என்ற நினேப்பாலும் வேற்றிடம் செல்லுகின்றனர். ஒரு குடும்பத்தில் நிகழும் இந்நிகழ்ச்சிக்கு, அக்கூட்டம் முழுவதும் கலந்தாலோசித்து வேற்றிடத்திற்கு அனேவருமே செல்கின்றனர். அது பாதுகாப்பையும் ஒரே சமூக அமைப்பையும் மாருமல் பேணிவருகிறது. இதனுல் நரிக்குறவர்கள் வேற்றின மக்களுடன் கலக்காமல் தனித்து வாழ்ந்து வருகின்றனர்.

இவர்களின் தனித்த உடையாலும், அழுக்கானதுணி மணிகளாலும், சுற்றுப்புறங்களாலும் ஒருவித முடைநாற்றம் வீசுகிறது. ஆதலின் நாய்கள் இவர்களின் வருகையை, குரைத்துக் கட்டியம் கூறி வரவேற்கின்றன. நாகரீகமடைந்த ஏனேய பழங்குடி மக்களும் இவர்களுடன் கலந்து பழக விரும்புவதில்லே. நரிக்குறவர்களேயும் நல்ல குடிமக்களாக மாற்றத் தொண்டு மனப்பான்மையும், அரசினரின்ஆதரவும்இருந்தால் சுகாதாரம் மற்றும் கல்வியறிவு பெற்று பொருளாதாரத் துறையிலும் முன்னேறி மானிட இயலாருக்கும், வரலாற்ருசிரியர்கட்கும், மொழியியலாருக்கும் பயன்படும் நல்லதொரு இனமாக விளங்குவர்.

---

# கொடவர் வாழ்க்கை முறை

இரா. பாலகிருஷ்ணன் M.A.

[கொடவர் வாழ்க்கைமுறை என்ற இந்தக் கட்டுரை இனக்குழு மக்களல்லாதவர்களின் மிக முன்னேறிய பண்பாட்டையும், சுற்றிலும் உள்ள முன்னேறிய பண்பாட்டையுடையவர்களோடு பல தொடர்புகளையும் உடையவர்களது வாழ்க்கை முறை பற்றிய ஆராய்ச்சியாகும். இது சமுதாய மானிடவியல் ஆராய்ச்சியாக உள்ளது. இவர்களது பண்பாடு சுற்றிலும் உள்ள மக்களது பண்பாட்டோடு வரலாற்றுரீதியாக இணைந்துவருகிறது. இவர்களது நாட்டுப்பாடல்களில் இவர்களது ஆர்வங்களையும், நல்வாழ்க்கை விருப்பையும், பிறரோடு கொண்டுள்ள தொடர்புகளின் தன்மைகளையும் காணலாம். அவற்றைச் சேகரித்து வெளியிட்டால், கன்னட தமிழ் மலையாள நாட்டுப் பாடல்களோடு ஒப்பிட்டு ஆராயலாம் — ஆசிரியர்]

மைசூர் மாநிலத்தின் தென்கோடியில் அமைந்துள்ளது குடகு (Coorg) என்னும் சிறு மாவட்டம். 1593 சதுரமைல்களே கொண்ட இச்சிறு மாவட்டம் 1956-ல் மைசூர் மாநிலத்தோடு சேருவதற்குமுன்னுல் ஒரு சிறு மாநிலமாக இருந்தது. இது ஏலக்காய், ஆரஞ்சு, காப்பி, தேன் ஆகியவை ஏராளமாகக் கிடைக்கக்கூடிய பகுதியாகும். கடல்மட்டத்திலிருந்து 400அடி உயரமுடைய காடுகளடர்ந்த மலைப்பிரதேசமாகும். அதோடு தமிழ்நாட்டிற்கு உயிர் அளிக்கும் காவிரியாற்றின் பிறப்பிடமாகவும் அமைந்துள்ளது. இவ்வாறு செறிந்த காடும், வளமான மலைகளும் கொண்ட குடகு மாவட்டத்தின் பெருங்குடி மக்கள் கொடவர் (Coorgees) களாக இருந்தபோதிலும் மற்றும் கௌடர், அய்ரி, முகமதியர், லிங்யாட், பிராமணர், கொலயா, பொலயா, மேதை, எரவா, குருபா, பாலர் போன்ற பல்வேறு இனத்தினரும் வாழ்கின்றனர். தன் இனத்தை மட்டுமன்றி அயலாரையும் போற்றி, ஆதரிக்கும் மனப்பக்குவமுள்ள கொடவர்களது வாழ்க்கை முறை மற்றவர்களினின்று மாறுபட்டிருப்பது மிகவும் வியப்பிற்குரியதாகவுள்ளது. ''படைக்குப் பிந்து பந்திக்கு முந்து'' என்பது தமிழ்ப் பழமொழி. ஆனுல் படைக்கு முந்துவதே கொடவர்களின் குணம். சுதந்திர இந்தியாவின் முதல் முப்படைத் தளபதி திரு. K. M. கரியப்பா அவர்கள் இக்கொடவர் குலத்தில் பிறந்தவராவார். நூற்றுக்கு ஐம்பதுபேர் போரையே தன் தொழிலாகக் கொண்டுள்ளனர். இதனுல் வீரத்தின் பரம்பரை எனப் போற்றுகின்றனர் பல்வேறறிஞர்கள். இவ்வாறு வீரத்தாலும் தன் விவேகத்தாலும் வேறுபட்டு நிற்கும் கொடவப் பெருங்குடி மக்களின் வாழ்க்கைமுறைகளைப்பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

•

''மங்கலம் என்ப மனைமாட்சி''-என்றார் வள்ளுவர். கொடவப் பெருங்குடி மக்கள் தங்கள் வாழ்வில் நடக்கும் நற்காரியங்கள் அனைத்தையும் மங்கல என்றே அழைக்கின்றனர். கொடவர் வாழ்வில் பிறப்பு முதல் இறப்புவரை நடக்கும் வாழ்க்கைவழி முறைகளை ஈண்டு நோக்குவோம்.

## 1. பிறப்பு

கொடவர் குடும்பத்தில் குழந்தை பிறக்கும் நிகழ்ச்சி அனைவராலும் எதிர்நோக்கப்படும் முக்கியத்துவம் வாய்ந்ததாக அமைந்துள்ளது. ஆண்குழந்தை பிறந்துவிட்டால்- ஆண்மைக்கு அடையாளமாக துப்பாக்கி ஒலி எழுப்பி அனைவருக்கும் அறிவிக்கப்படுகிறது. அதே நேரத்தில் பெண்குழந்தையாயின் இனிமைக்கும் பெண்மைக்கும் மென்மைக்கும் அடையாளமாக கிண்கிணி மணியோசை எழுப்பப்படும். கொடவர்களின் கொள்கைப்படி பிறந்த குழந்தைக்கு முதன்முதலில் சர்க்கரையும், வெண்ணையும், நல்லமிளகும் கலந்து, எதிர்காலத்தில் சர்க்கரைபோல் இனிமையும், வெண்ணெய்போல் இளகிய மனமும், நல்லமிளகு போல் சுறுசுறுப்பும் பெற்று வாழவேண்டுமெனக் கூறிக் கொண்டே கொடுப்பர். அக்குழந்தையை மென்மையான வாழைஇலையின்மீதே கிடத்தி வைப்பார்கள். குழந்தை பிறந்த வீட்டார் பன்னிரெண்டு நாட்கள் பிறப்புத்தீட்டைக் கடைப்பிடிக்கவேண்டும். அவ்வேளைகளில் எவ்வித விழாக்களிலும் கலந்துகொள்ளாமல் இருக்கவேண்டும். 12-வது நாள் குழந்தைக்கு பெயர்சூட்டுவிழா நடைபெறும். இவ்விழாவிற்கு நெருங்கிய உறவினர் அனைவரைம் அழைப்பார்கள். அன்றுதான் குழந்தையை முதன்முதலாக தொட்டிலில் கிடத்துவார்கள். குழந்தையைத் 'தொட்டிலில் இடுவதற்கு முன்னர் ஒத்திகை நடைபெறும். அதாவது ஒரு அடி நீளமுள்ள கல்லை எடுத்து அங்கு வந்திருக்கும் சுமங்கலி ஒருத்தி தொட்டிலில் இட்டு 'இக்கல்போல் நெடுநாள் வாழ்க' என வாழ்த்துவாள். அதன்பின்னர்தான் குழந்தையைத் தொட்டிலில் இடுவார்கள். அப்பொழுது அக்குழந்தைக்குத் தங்கக்கரண்டியில் வைக்கப்பட்டிருக்கும் இனிப்புப்பொருளைச் சிறிது கொடுத்து, தொட்டிலில் இட்டவுடன் பெரியோர்களால் சூட்டப்பட்ட பெயரால் அழைத்து தொட்டில்பாட்டுப் பாடுவார்கள். குழந்தையைப் பெற்றவள் அறுபது நாட்கள் தீட்டுமுறையைக் கடைப்பிடிக்கவேண்டும். இந்நாட்களில் அவள் அனைத்து அணிகலன்களையும் கழற்றிவிடவேண்டும். அறுபது நாட்களும் வென்னீரிலேயே குளித்துவந்த அவள் அறுபதாவது நாள் குளிர்ந்த நீரில் குளிப்பாள். இவ்வளவுநாளும் வென்னீரேயிருந்த அலிமினியப்பாத்திரத்தில் குளிர்ந்த நீரை விடுகின்ற நேரத்தில் இப்பானைபோல் தாயின் வயிறும் குளிர்ச்சியடையட்டும் என்று கூறியவண்ணம் நீரிடுவர். இந்நாளில் தாய் குளித்து சுத்தம் செய்துவிட்டு, மணப்பெண் போல் உடையணிந்து, வந்திருக்கும் உறவினர்களுடன் குடும்பத்துக் கிணற்றிற்குச் சென்று கங்கா பூசை செய்வாள். அதாவது தேங்காய், பழம், அரிசி, வெற்றிலை, பாக்கு இவைகளை கிணற்றங்கரையில் வைத்து இறைவனை எண்ணி வணங்கி, பின் தேங்காயை உடைத்து வெற்றிலைபாக்குடன் கிணற்றினுள் போடவேண்டும். பின்னர் இரு சிறு பாத்திரங்களில் எடுக்கப்பட்ட நீரில் மும்முறை குடித்துவிட்டு அப்பாத்திரம் இரண்டையும் தலைமேல் ஒன்றன்மேல் ஒன்றாக வைத்து உறவினர் பின்தொடர வீட்டிற்குச் செல்வாள். அப்பொழுது அவளுடன் மற்றும் ஓரிரு சுமங்கலிகளும் நீர் சுமந்து வருவார்கள். கொண்டுவரும் நீரை அடுப்படியில் இறக்கி வைத்துவிட்டு, மத்திய அறையிலிருக்கும் விளக்கை வணங்கிவிட்டு, கூடியிருக்கும் பெரியோர்களிடம் ஆசி பெறுவாள். வந்திருக்கும் அனைவரும் குழந்தையையும், தாயையும் வாழ்த்தி தன்னாலியன்ற பொருளைப் பரிசாகக் கொடுப்பர். பின்னர் அங்கு பெருவிருந்து நடைபெறும்.

## 2. 'கொதி மங்கல'

இம்மங்கலம் குழந்தையின் நான்கு அல்லது ஐந்தாவது வயதில் நடைபெறும். இம் மங்கலம் இக்காலத்தில் அதிகமாக இல்லையாயினும் ஒருகாலத்தில் பெரிதும் வழக்கத்தில் இருந்து வந்துள்ளது. பெற்றோர்கள் தம் பிள்ளைகளின் மேலுள்ள அன்பு பாசம் இவைகளின் காரணமாக, தம் பெருமைக்கும், பெயருக்கும் ஏற்றாற்போல் இம் மங்கலத்தை நடத்துவர். அன்று விருந்தினர் பலரை வரவழைத்து குழந்தையை (பெண் அல்லது ஆண்) திருமணத்திற்கு அலங்காரம் செய்வது போல் அலங்கரித்து, அனைவர் மத்தியிலும் அமர்த்தி தாய், தந்தை, பெரியவர்கள் என்ற முறைப்படி வாழ்த்துவார்கள். குழந்தை பெரியவர்கள் காலைத் தொட்டு வணங்கி ஆசி பெறும். பின்னர் அனைவருக்கும் பெருவிருந்து நடைபெறும்.

## 3. 'கெமிகுத்தி மங்கல'

இது ஆண்குழந்தையின் ஆறு அல்லது ஏழாவது வயதில் நடைபெறும். ஒவ்வொரு கொடவ ஆண்மகனும் ''பத்தொந்தி கடுக்கு'' என்ற காதணியை அணியவேண்டும். காதைக் குத்தி இவ்வணியையிடும் நாளை ''கெமிகுத்தி மங்கல'' என்று கூறுகிறார்கள். காது குத்தாதார் தம் வாழ்வில் திருமணம் செய்து இல்வாழ்க்கை நடத்தும் உரிமையற்றவர்களாக இருப்பதோடு எந்தவொரு முக்கிய நாட்களிலும் மற்றவர்களுக்குச் சமமாக அமரும் தகுதியையும் இழந்துவிடுகிறார்கள். இவ்வழக்கு இக்காலத்தில் பெரிதும் இல்லையாயினும் சிற்சில இடங்களில் இருப்பதை இன்றும் காணலாம்.

இம்மங்கலம் ஆண்களுக்கு மட்டுமே உரியதாகையால் பெண்களுக்கு காது குத்தமாட்டார்களா? என்று கேட்கலாம். பெண்களுக்குக் காதுகுத்துவதை மங்கலமாகக் கொண்டாடும் வழக்கம் இல்லை. மங்கலம் நடக்கவேண்டிய குறித்த நேரத்தில் காது குத்தப்பட வேண்டிய குழந்தையை நல்ல ஆடை அணிவித்து, தோள்களில் இரு சிவந்த துணிகளைப் போட்டு, அமருவதற்குரிய இருக்கையில் அமர்த்துவர். அன்று வீடுமுழுவதும் திருமணச் சடங்கின்போது அலங்கரிக்கப்பட்டிருப்பது போல அலங்காரம் செய்யப்பட்டிருக்கும். குழந்தை இருக்கையில் அமர்ந்தவுடன், குடும்பம் அதன்—பெருமை, காது குத்துவதின் சிறப்பு இவைகளடங்கிய பாட்டைப் பாடகர்கள் மேள தாளங்களுடன் பாடுவார்கள். காதுகுத்தவேண்டிய நேரம் வந்தவுடன், காதுகுத்தக்கூடிய தட்டார் வந்து, காதைக்குத்தி, தான் செய்துகொண்டு வந்த பத்தொந்தி கடுக்கனைக் காதில் பொருத்துவார். அதன்பின் அனைவரும் குழந்தையை வாழ்த்தி பணமுடிப்புகளைப் பரிசாகக் கொடுப்பர். காதுகுத்திய தட்டாருக்கு வழக்கப்படி கொடுக்கக்கூடிய பணம், அரிசி, பழம், தேங்காய் அனைத்தும் கொடுக்கப்படும். முடிவில் மங்கலத்தில் கலந்துகொண்ட உறவினர் அனைவருக்கும் பெரு விருந்து அளிப்பர்.

## 4. ''நரிமங்கல''

கொடவர்களின் வீரத்தை எடுத்துக்காட்டும் பெருமைக்குரியதாக அமைந்துள்ளது இந்நரிமங்கலம். ஆணோ பெண்ணோ யாராயினும் காட்டின் கொடிய விலங்குகளில் ஒன்றாகிய புலியைக் கொல்வாராயின், அவர்களின் வீரத்தைப் பலரறியப் போற்றுவதே இம்மங்கலத்தின் நோக்கம். பெண்களும் இவ்விழாவில் பங்குகொள்கின்றனர் என்பதை நோக்குமிடத்து கொடவப்பெண்களின் வீரம் நமக்குப் புலனாகின்றது.

பொதுவாக இம்மங்கலம் நாட்டின் பொதுவிடமாகிய மந்திலோ அல்லது ஊர் மந்திலோ வைத்து நடைபெறும். அங்கு சிறு பந்தல் ஒன்று கட்டி அலங்கரித்து, அதன் முன்னர் இரு தூண்களை நட்டு, அதன்மேல் மேற்கு முகமாகப் புலியைக்கட்டி தொங்கவிடுவர்.

புலியைக் கொண்டுவர முடியவில்லையாயின் புலியின் தலையோ அல்லது தோலோ அல்லது வால் நுனியோ அங்கு தொங்கவிடப்பட்டிருக்கவேண்டும். புலியைக் கொன்ற வீரர் தன் வீட்டில் குளித்து சுத்தம் செய்து, வழக்கமான குப்பியாபோன்ற துணிமணிகளை அணிந்து, முறைப்படி பூசைஅறைவிளக்கு, காரோண யாவற்றையும் வணங்கிவிட்டு, உறவினர் புடைசூழ, மேளதாளங்களுடன் ஊர் மந்துநோக்கி ஊர்வலமாக வருவார். வரும்போது அவ்வீரர் துப்பாக்கியை முன்நோக்கி நீட்டியவண்ணம் பிடித்தபடி வருவார். ஒஜ என்னும் சிவந்த துணியால் துப்பாக்கி மூடப்பட்டிருக்கும். புலி துப்பாக்கியால் கொல்லப்படாமல் வேறு கருவியால் கொல்லப்பட்டிருக்குமாயின் அந்த ஒஜ என்னும் சிவந்ததுணி அவ்வீரரின் தலையில் கட்டப்பட்டிருக்கும். புலியைக் கொன்றவர் ஆண்மகனுயின் வழி நெடுகிலும் வெடிமுழக்கங்கள் செய்யப்படும். பெண்வீரராயின் வெடிமுழக்கத்தை நாம் கேட்கமுடியாது. மேளதாளங்களுடன் பாட்டை மட்டுமே நம்மால் கேட்கமுடியும். அதோடு துப்பாக்கியை மூடியிருக்கவேண்டிய ஒஜ அவரின் தலையில் அலங்கரித்துக்கொண்டிருக்கும். இவ்வாறு அழைத்துவரப்பட்ட வீரரை, புலி தொங்கவிடப்பட்டிருக்கும் இடத்திற்கு முன்னுல் அமைந்த இருக்கையில் புலியை நோக்கியவண்ணம் கிழக்கு முகமாக அமர்த்துவர். அவ்வேளையில் பந்தலைச்சுற்றி நாட்டியங்களும், புலி கொன்ற வீரச்செயல் பற்றிய பாட்டும் நடைபெற்றுக்கொண்டிருக்கும். முதன்முதலில் அவ்வீரரின் தாய், வழக்கப்படி புனிதமான அரிசியை அவ்வீரன்மேல் தூவி, ''இன்று போல் என்றும் உன் வீரம் நிலைபெற்று நிற்பதாக''—என்று வாழ்த்தி, குடிப்பதற்குப் பாலும் கொடுத்து, பொம்பண (Goldcoin) என்னும் பணமுடிப்பையும் பரிசாகக் கொடுப்பாள். அவ்வேளையில் அந்த வீரமகன் தன் தாயின் காலைத்தொட்டு வணங்கும் காட்சி அனைவருக்கும் பெருமையளிப்பதாக இருக்கும். பின்னர் ஒவ்வொரு உறவினராக வந்து வாழ்த்தி தனக்கியன்ற பொருளைப் பரிசாக அளிப்பர். இவையாவும் முடிந்தவுடன் அனைவரும் ஊர்வலமாக வீரரின் வீட்டையடைந்து அங்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் பெருவிருந்தில் கலந்துகொண்டு மகிழ்வர்.

## 5. ''கன்னிமங்கல''

ஒருவன் ஒருத்தியை முதன்முதலாகத் தன் வாழ்க்கைத்துணைவியாக ஏற்றுக்கொள்ளும் மங்கலவிழாவிற்கு கன்னிமங்கல என்று பெயர். இதைத் தமிழில் திருமணம் என்றழைக்கிறோம். இத்திருமண நிகழ்ச்சியில் பல்வேறு பிரிவுகள் அடங்கும். அவற்றை ஒவ்வொன்றுகக் காண்போம்.

**மணமகள் தேர்வு :—** திருமணத்தின் ஆரம்பமாக முதன்முதலில் மணப்பெண் தேர்வும், மணமகன் தேர்வும் மாறிமாறி நடக்கும். மணமகன் வீட்டாரே முதன்முதலாகப் பெண்ணைக் கேட்பதால் மணமகள் தேர்வு எனக்கோடலே ஏண்டு பொருத்தமுடையதாகவுள்ளது. பண்டைக்காலத்தில் பெற்றோர்களே மணப்பெண்ணைத் தேர்ந்தெடுத்துத்திருமணத்திற்குவேண்டியஏற்பாடுகளெல்லாம் செய்தார்கள். ஆனுல் இக்காலத்தில் பெற்றோர்களின் பங்கு குறைந்து பிள்ளைகளின் விருப்பப்படியே பெரும்பான்மைத் திருமணங்களும் நடைபெறுகின்றன.

கொடவர்கள் மணப்பெண்ணைத் தெரிந்தெடுப்பதற்கு முன்னர் சில முக்கியமான விசயங்களைக் கவனிக்கிறார்கள். அதாவது ''தாயைப்போல பிள்ளை நூலைப்போலச் சேலை'' என்றும் பழமொழியை மனத்தில் கொண்டு பெண்ணின்தாயின் குணநலன்களை முதன் முதலாகக்கவனிக்கின்றனர். அதன் பின்னரே பெண்ணின் குணுதிசயங்கள், குடும்பம் அனைத்தையும் நோக்கி முடிவெடுப்பர். பையன் வீட்டார் பெண்ணைப் பார்ப்பது போல் பெண் வீட்டாரும் பையனின்குண

நலன்கள், குடும்பப்பெருமைகள் யாவற்றை யும் பார்க்கத்தவறுவதில்லை. இவ்வாறு இரு சாராரும் ஒருவரையொருவர் பார்த்து, சம்ம தித்த பின்னர் பெண்வீட்டார் பையனின் ஜாதகத்தைவாங்கி சகலவிதப்பொருத்தங் களையும் பார்ப்பார்கள். பையனுக்கு ஜாதகம் இல்லையெனில் இருதரப்பினரும் கோவிலுக் குச்சென்று பையன்பெயரிலும், பிள்ளையின் பெயரிலும் பூசைசெய்வார்கள். அக்காலை இறைவன் திருவுருவத்திலிருந்து கீழேவிழும் படி பூக்களைச்சொரிவார்கள். அப்பொழுது சிவந்தபூ விழுந்தால்கெட்டது எனவும், வெள்ளைப் பூவிழுந்தால் நல்லதுஎனவும், விழு கின்ற வெள்ளைப்பூ சிலையின் வலப்பக்கம் விழுந்தால் மிகவும்நல்லது எனவும் கொள் வார்கள். சிவந்தபூ விழுந்து சிலதிருமணங்கள் நின்றுபோனதும் உண்டு. இந்நிகழ்ச்சிக்குப் பூவெடுப்பு என்றுபெயர். இவ்வாறுபொருத் தங்களைப்பார்த்த பின்னர் திருமணத்திற்கு நாள்குறிக்க ஏற்பாடுகள்செய்வர்.

இவ்வாறு பெண்தேர்வு முடிந்தபின் திரு மணநாள்குறித்தலின் பொருட்டுமணமகன் வீட்டு அருவாவும், மற்றும்சிலஉறவினர்களும் பெண்வீட்டிற்கு வருவார்கள். கொடவர் குடும்பங்களில் நடக்கும் நிகழ்ச்சிகளைத் தலைமைஏற்று நடத்துபவரை அருவாஎன்று அழைக்கின்றனர். இவர்கள் மண்ணருவா, பொன்னருவா எனஇருவகைப்படுவர். நில புலன் அடிப்படையில் நண்பரானவரை பொன்னருவாஎன்றும் அழைக்கிறார்கள். எவ் வாறேனும் அமைந்த இருவீட்டு அருவாக் களும் கூடி நிமித்திகனின் உதவியோடு திருமணநாளைக்குறிப்பர். பின்னர் மணமகன் வீட்டார் பெண்ணிற்கென்று கொண்டுவந்த நகையையும், சாட்சிப்பணத்தையும் கொடுத் தபின் சிற்றுண்டியை முடித்துவிட்டு வீடுதிரும் புவர். இவ்வாறு வீட்டிற்குத் திரும்பி வருங் கால்வேறு எந்த உறவினர் வீட்டிற்கும் செல் லாமல் நேரே தன்வீட்டிற்கே செல்ல வேண் டுமென்பதுநியதியாகும். திருமணநாள் குறித் தது முதல் மணமகனும், மணமகளும் சில கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தல் வேண் டும். குறிப்பாக ஆற்றைக் கடத்தல் கூடாது, விசேடநாட்களில் அணியும் ஆடைகளை அணி யக்கூடாது. இறப்புபோன்ற கெட்ட செய்தி கள் தங்கள் வீட்டிற்குவந்து சேரக்கூடாது. இவ்வாறு கட்டுப்பாடுகளுடன் திருமணம் ஆகும்வரை நடந்துவருதல் மிகவும் போற்றிக் காக்கப்படுகின்றது.

திருமணத்திற்கு முந்தியநாளை கரிக்முரிப்ப தினம் அல்லது 'சப்பர' என்று அழைக்கிறார் கள். அன்று தேரணச்சடங்கு அதாவது மண மகனும் மணமகளும் அவரவர்வீட்டில் திரு மணத்தன்று வழக்கப்படி செய்யும் கடன்களை முடித்து வருவதுபோல்—வந்து பெரியோர் களிடம் ஆசிபெறுவர். தேரணச்சடங்கு முடிந்ததும் ஊராருக்கு ஐந்து வெற்றிலையும் ஆறுபாக்குகளும் வீதம் கொடுக்கவேண்டும். இதை ஊருபத்தி என்றழைப்பர்.

கொடவர்களின் திருமணச்சடங்குமுறை மற்ற இனத்தவரினின்று மிகவும் மாறுபட்டுக் காணப்படுகிறது. முதன்முதலில் திருமணச் சடங்கிற்கு வருவோரை பாளெவிருது கொடுத்து வரவேற்பார்கள். அதாவது விருந் தினர்கள் கொண்டுவருகிற அரிசி, இறைச்சி, பழம் முதலியவற்றைப் பெறுவதற்கு முன்னால் —வருபவர்களை வீட்டின் முன்பக்கத்தி லமர்த்தி மூன்று வாழைத்தண்டுகளை நட்டு— வருகின்ற விருந்தினரில் ஒருவரை வெட்டச் செய்வார்கள். இதை—மணவீட்டாரால் வருவோர் கௌரவிக்கப்படுவதின் அடையாள மாகச் செய்கின்றனர். அதன் பின்னரே அவர்கள் கொண்டுவரும் கேட்டாமெ (அரிசி -இறைச்சி-பழம்) யைப் பெற்று வீட்டினுள் அழைத்துச்செல்வர். இவ்வாறு விருந்தினர் கள் அனைவரும் வந்தபின் மணமகனுக்கும் மணமகளுக்கும் தனித்தனியே அவரவர் வீட்டில் முகூர்த்தம் நடைபெறும். அதன்பின் தம்பதி முகூர்த்தா என்று அழைக்கப்படும் சடங்கிற்காக இருவரையும் ஊர்வலமாக அழைத்து

வருவார்கள். இவ்வாறு 'தம்பதி முகூர்த்தா' விற்காக அமைக்கப்பட்ட பொதுவிடத்தில் (கல்யாணமண்டபம்) திருமணம் நடைபெறும். இவர்களிடையே தாலிகட்டும் வழக்கம் இல்லை. வீட்டின் தலைவர்முதல் அனைவரும் வாழ்த்திச் செல்வதையே திருமணமாகக் கருதுகின்றனர். முடிவில் மணமகன் மணமகளின் கையில் தன் அன்பின் அடையாளமாக ஒரு மோதிரத்தை அளிப்பான். பின்னர் கையைப்பிடித்தபடி அங்கிருக்கும் குத்துவிளக்கை மும்முறை வலம்வருவார்கள். பின்னர் அனைவருக்கும் பெருவிருந்து அளிக்கப்படும்.

## 6. 'கூடாவளி மங்கல'

கொடவர் மறுமண வாழ்க்கையை அனுமதிக்கிறார்கள். கணவனை இழந்த கைம்பெண் மறுமணம்செய்து வாழ்வதைக் கூடாவளி அதாவது திரும்பச் சேர்தல் என்றும், அந்நிகழ்ச்சியை 'கூடாவளிமங்கல' என்றும் அழைக்கிறார்கள். கூடாவளிமங்கலம் மூன்று வகைப்படும்.

1. **இழந்த கணவனின் உடன்பிறந்தாரை மணத்தல்:-** இத்திருமண நிகழ்ச்சியில் மணமகன் கன்னிமங்கலத்தில் செய்த அனைத்துக் கலாச்சார விதிகளையும் செய்யவேண்டும். ஆனால் மணமகள் அதாவது கைம்பெண் அவ்விதிகள் ஒன்றையும் கடைப்பிடிக்கக்கூடாது. மங்கலத்தின்போது மிக நெருங்கிய உறவினர்களே அழைக்கப்படுவார்கள். தம்பதி முகூர்த்தத்தின்போது மணமகள் தன்னைத்தானே அலங்காரம்செய்துகொண்டு வரவேண்டும். அதன்பிறகு கன்னி மங்கலத்தில் நடந்தது போலவே யாவையும் முடியும்.

2. **வேறு குடும்பத்தவரை மணத்தல்:-** கைம்பெண் வேறொரு குடும்பத்திலுள்ளவரை மணக்க விரும்பினால் முதன்முதலில் தன் கணவன் வீட்டிலுள்ள உறவுமுறை அனைத்தையும் விட்டுவிட்டுத் தான்பிறந்த வீட்டிற்குச் செல்லவேண்டும். இதைக் கல்லுமரகய்ப்பெ என்று அழைக்கிறார்கள். கல்லுமரகய்ப்பெ நடத்துவதற்காக விதவையின் பிறந்தவீட்டு அருவாவும் மறைந்த கணவன் வீட்டு அருவாவும் மற்றும் சிலரும் இறந்த கணவன் வீட்டில் கூடுவார்கள். கைம்பெண் திருமணம் நடக்கும்போது கொண்டுவந்த சாமான்கள் அனைத்தையும் வீட்டின் திண்ணையில் கொண்டுவைப்பார்கள். அச்சாமான்களில் ஒரிரு துணிமணிகளை மட்டும் எடுத்துவிட்டு திருமணநாள் குறித்தநேரத்தில் கொடுக்கப்பட்ட சாட்சிப்பணத்தையும் திரும்பப் பெற்றுக்கொள்வார்கள். கைம்பெண்ணுக்கு குழந்தைகள் இருந்தால் அவை அங்கேயே வளரும். கைம்பெண் விட்டுச் செல்கின்ற சாமான்களை அவளது குழந்தைகளுக்காகப் பயன்படுத்துவார்கள். இவ்வாறு கல்லுமரகய்ப்பை நடத்தியபின் அக்கைம்பெண் மற்றவரைத் திருமணம்செய்யும் தகுதி பெறுகிறாள். இத்திருமணமும் இழந்த கணவனின் உடன்பிறந்தாரை மணக்கும் நிகழ்ச்சி போலவே நடக்கும்.

3. **விவாகரத்து செய்யப்பட்டவனை மணத்தல்:-** ஏதேனும் வருத்தம் காரணமாக கணவன் மனைவிக்குள் மணமுறிவு ஏற்பட்டு தொடர்பு நெடிதுநாள் விடுபட்டிருந்தால் விவாகரத்து செய்கிறார்கள். முதன்முதலில் பெண்ணின் வீட்டார் கணவன்வீட்டிற்கு வந்து விவாகரத்து செய்யும்படிக் கேட்பார்கள். சம்மதிக்கின்ற கணவன்வீட்டார் கல்லுமரகய்ப்பெ நடத்தி பெண்ணின் தொடர்பை அறுத்துவிடுகிறார்கள். பின்னர் தான் விரும்புகிற யாரையேனும் மணம்செய்து வாழ உரிமையளிக்கப்படுகிறது. இவ்வாறு நடக்கும் திருமணமும் மேற்கூறப்பட்ட திருமணத்தைப்போல் நடக்கும். இம்மூன்று கூடாவளி மங்கலங்களும் கொடவர்மத்தியில் இன்றும் பழக்கத்திலுள்ளன.

## 7. 'ஒக்க பரிஜெ'

ஏதாவது குடும்பத்தில் ஒரேயொரு பெண்ணைத்தவிர மற்ற வாரிசுகள் இல்லாதிருப்பின், அப் பெண் அந்த குடும்பத்தின் நிரந்தர வாரிசாக இருக்கவேண்டும். அதற்காகத் திருமணமாகும்பொழுது மணமகன் பெண்வீட்டுக் குடும்பத்தின் உறுப்பினராக மாறவேண்டும். இவ்வாறு குடும்பத்தின் பெயரை நிலைநிறுத்தும்வண்ணம் நடத்தப் படுகின்ற திருமணத்திற்கு ஒக்க பரிஜெ என்று பெயர். ஒக்க என்றால் குடும்பம்.

மணமகனை மணமகளின் குடும்பத்து உறுப்பினனாக்குவதற்கு சம்பந்த கொடுப்பெ நிகழ்ச்சியின்போது இருவீட்டு அருவாக்களும் பழக்க வழக்கங்களின்படியுள்ள முறையான சடங்கைச் செய்வார்கள். மணமகள் குடும்பத்திற்கு மணமகன் குடும்பம் மாறிவிட்டான் என்பதற்குச் சாட்சியாகப் பணம் கொடுக்கப்படும். அதன் பிறகு பெண் வீட்டுக் குடும்பப் பெயருடனேயே மணமகன் அழைக்கப்படுவான்.

## 8. 'மக்க பரிஜெ'

ஒரு குடும்பத்தில் ஒருபெண்ணைத் தவிர மற்ற வாரிசுகள் இல்லாதிருந்தால், திருமணம் செய்தவன் பெண்குடும்ப உறுப்பினனாக மாறாதிருந்தால் 'மக்க பரிஜெ' முறை மேற்கொள்ளப்படுகிறது. அதாவது பெண் அவள் பிறந்த வீட்டிலேயேயிருப்பாள். அவளுக்குப் பிறக்கின்ற குழந்தைகள் அவள் குடும்பத்தின் பெயராலேயே அழைக்கப்படுவார்கள். தன் கணவன் குடும்பத்தில் இவளுக்கு எவ்வித உரிமையும் கிடையாது. கணவன் தன் வீட்டிற்கு வரும்பொழுது அவனுக்கு வேண்டிய உணவு, உடை போன்ற வசதிகள் கொடுக்கவேண்டும். கணவனுக்கு மனைவியை காப்பாற்றும் பொறுப்புக் கிடையாது. இவ்வாறு தன் குழந்தைகளைக் குடும்பத்தின் நலனுக்காக மாற்றுவதற்காக ஏற்பாடு செய்யப்படும் திருமணத்திற்கு மக்க பரிஜெ என்று பெயர்.

## 9. 'குட்ட பரிஜெ'

திருமணமாகாத பெண் கள்ளத்தனமாக மற்ற ஆடவனின் தொடர்பால் கருத்தரித்தலும் உண்டு. அப்படி ஏற்பட்டால் கருதரிப்பதற்குக் காரணமானவன் அவளைத் திருமணம் செய்ய மறுத்தால் அல்லது குழந்தை பெற்றபின் தாயோ, அல்லது குழந்தையின் தந்தையோ இறந்தால் அக்குழந்தையை அல்லது அக் கைம்பெண்ணை குழந்தைக்குக் காரணமாக இருந்தவனின் வீட்டில் சேர்க்கும் உரிமை உண்டு. இதைக் 'குட்ட பரிஜெ' என்றழைக்கிறார்கள்.

## 10. 'பாளெ மங்கல'

ஒரு ஆண்மகனுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகள் இருந்து அதில் யாரேனும் இறந்துவிட்டால் அவர்களின் ஆவி தன்னைப் பின் தொடராவண்ணம் இருப்பதற்கு பாளெ மங்கலம் நடத்துகிறார்கள். முதலில் வாழைத் தண்டு ஒன்றை நாட்டி அதை அலங்கரிக்கிறார்கள். இவ் வாழைத்தண்டை இறந்துபோன மனைவியின் பிரதிபிம்பமென எண்ணுகிறார்கள். மணநாளில் மணமகளுக்குச் செய்தது போல் இவ் வாழைத் தண்டிற்கு செய்வார்கள். இந் நிகழ்ச்சி இக்காலத்தில் அதிகமாக இல்லையாயினும் ஒரு காலத்தில் மிகவும் பழக்கத்தில் இருந்தது. [பாளெ ≈ வாழை]

## 11. 'பய்த்தாண்டெக்கு அளெப்ப மங்கல'

ஒரு பெண் பத்துக் குழந்தைகளைப் பெற்று அப் பத்துக் குழந்தைகளும் உயிரோடிருந்துவிட்டால் அதைவிட மகிழ்ச்சியான செய்தி கொடவர்களுக்கு வேறு எதுவுமேயில்லை. பத்துக் குழந்தைகளைப் பெற்ற தாயின் பெயரையும் பெருமையையும் நிலைநாட்டும்பொருட்டு பய்த்தாண்டெக்கு அளெப்ப மங்கலம் களிக்

கிருர்கள். பொதுவாக பத்தாவது குழந்தை பெற்ற இரண்டுமாதத்தில் இம் மங்கல நடைபெறும். கன்னி மங்கலத்தில் நடந்தது போலவே முகூர்த்தம் அனைத்தும் நடக்கும். முடிவில் வந்திருக்கும் உறவினர் அனைவரும் வாழ்த்திப் பரிசு வழங்குவார்கள். அனைவருக்கும் பெரு விருந்து நடைபெறும். இக் காலத்தில் இம் மங்கலம் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

*[பய்த்தாண்டெக்கு = பத்து ஆண்டுகளுக்கு ; அளெப்ப = இருத்தல்]*

திருமணமானபின் ஒரு குழந்தையும் பெருமல் ஒரு பெண் இறந்துவிட்டால் அப் பெண்ணின் வீட்டார், திருமணத்தின்போது கொடுத்த பொருட்களனைத்தையும் திரும்பப் பெறுவதற்கு உரிமை பெற்றவர்களாவார்கள். அதுவன்றி பெண் தன் கணவனை இழந்து விட்டால் கணவன் வீட்டில்தான் இருக்கவேண்டுமென்ற நியதி கிடையாது; தம் பெற்ருேர் வீட்டில் வந்துஇருக்கலாம். அப்படி இருக்குங்கால் குடும்பத்தில் எவ்வித உரிமையும் கொடுக்கப்பட மாட்டாது. உணவு உடை, உறைவிடம் இவற்றிற்கு மட்டுமே அங்குஉரிமை உண்டு. இதேபோன்று விவாகரத்துச் செய்யப்பட்ட பெண் தம்பெற்ருேர் வீட்டில்வந்து இருந்தாலும் உரிமைகள் கொடுக்கப்படமாட்டாது.

ஆண்கள் ஒன்றிற்கு மேற்பட்ட திருமணம் செய்யும் உரிமை பெற்றவர்களாக இருக்கிருர்கள். தன் முதல்மனைவியை இழந்து விட்டாலோ, அல்லது விவாகரத்துசெய்து விட்டாலோ எவ்விதத்தடையுமின்றி இரண்டாம் திருமணம் செய்யலாம். முதல் மனைவிக்கு குழந்தையில்லையாயின் அம்மனைவியின் விருப்பத்தின் பேரிலும் மறுமணம் செய்யலாம். இவ்வாறன்றி ஒரு ஆடவர் மறுதிருமணம் செய்ய முற்படுவாராயின் அச்செய்கைக்குக் குடும்பத்தார் ஒத்துக் கொள்வதில்லை.

## 12. இறப்பு

கொடவர்களின் கொள்கைப்படி, ஒருவர் படுக்கையில்வைத்து இறந்தாலோ அல்லது வீட்டின் உள்ளறையில் வைத்து உயிர் நீத்தாலோ அது குடும்பத்திற்கே கேடு என எண்ணுகின்றனர். அதனுல் ஒருவர் இனிப் பிழைக்க மாட்டார் எனத்தோன்றுகின்ற நேரத்தில் வீட்டின் மத்திம அறையில் ஒரு பாயின்மேல் அவரைப் படுக்கவைத்து, பக்கத்தில் ஒரு தேங்காயையும், சிறிது துளசி இலையையும், கரிக்கெ என்னும் புல்லையும், ஒரு தங்க நாணயத்தையும் வைப்பார்கள். உயிர் போய்விடுமோ எனத் தோன்றும்போது அந்தத்தேங்காயை உடைத்து, அதன் நீரை துளசி இலையின் மூலமும், கரிக்கெ புல்லின் மூலமும் வாயில் தொட்டுத்தொட்டு வைத்துவிட்டு அந்நாணயத்தை வாயினுள் வைப்பார்கள். இப்பழக்கம் இக்காலத்தில் கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வருகிறது.

ஒருவர் இறந்து விட்டால் அச்செய்தியை மற்றவர்களுக்குத் தெரியப்படுத்துவதற்காக கிறிஸ்து மதத்தினர் கோவிலில் மணியடிப்பது போல, கொடவர்கள் வெடிகளை வெடிக்கச் செய்கிருர்கள். வயதானவர் அல்லது திருமணமானவர் இறந்தால் இரண்டு வெடிகளும் குழந்தை அல்லது திருமணமாகாதவர் இறந்துவிட்டால் ஒருவெடியும் விட்டு விட்டு வெடித்துக்கொண்டிருக்கும். வெடிச்சத்தம் கேட்டவுடன் ஊரில் வீட்டிற்கொருவரேனும் இறந்த வீட்டிற்குச் செல்லவேண்டும். தூரத்து உறவினர்களுக்கு ஆட்கள்மூலம் செய்தியனுப்புவார்கள். இறந்தாரைப் புதைப்பதற்கு முன்னுல் பல்வேறு சடங்கு முறைகளிருக்கின்றன. அவற்றை ஒவ்வொன்ருகக் காண்போம்.

1. **கூளுபெப்பெ:** இறந்தவருடைய வீட்டாரும், மற்றும் நெருங்கிய உறவினர்களும் முதன் முதலில் குளித்து விட்டு உடைகளை மாற்றிக் கொள்ள வேண்டும். ஆண்கள் ஒரு வெள்ளை வேஷ்டியும் துண்டும், பெண்கள்

சேலையும் அணிந்துகொள்ள வேண்டும். இவ்வாறு குளித்துவிட்டு உடைகளை மாற்றிக் கொள்வதை நீருக்கிளிவெ என்று அழைக்கிறார்கள். நீருக்கிளித்தவர்கள் இறந்தவர் வீட்டிற்கு வரும்போது விட்டிலிருந்து செல்லுகின்ற பாதையில் ஒரு வாழையிலையில் சோறும், உடைத்த தேங்காயும் அதன்பக்கத்தில் எரிகின்ற திரியொன்றையும் வைக்கவேண்டும். இதை இவர்கள் கூளுபெப்பெ என்று கூறுகிறார்கள்.

இவ் வீட்டிற்கு வருகின்றவர்கள் அனைவரும் தம் புறங்கையால் இறந்தவரின் மார்பைத் தொடவேண்டும். இதற்கு சாவுக்கு கைகொடுப்பெ என்று பெயர். அப்பொழுதிலிருந்து இறந்தவரை அடக்கம் செய்யும் வரை நான்கு ஆண்கள் சாவுப் பாட்டுப் பாடிக்கொண்டிருப்பார்கள். முற்காலத்தில் பெண்களும் பாடுவதுண்டு. இரவில் இறந்தவரை அடுத்தநாள் தான் அடக்கம் செய்ய வேண்டுமென்னும் நிலை ஏற்படின் அவ்வுடலின் பக்கத்தில் ஒரு விளக்கை ஏற்றிவைத்து, அவ்வீட்டு அருவாவும், மற்றும் சிலரும் தூங்காமலிருப்பார்கள். இதற்கு சாவு ஒளிவே என்று பெயர்;

2. **குளிப்பாட்டுதல்:** இறந்தாரைக் குளிப்பாட்டுவதற்காக வீட்டின் இடப்பக்கம் ஒரு மறைவிடம் அமைப்பார்கள். இறந்தது ஆணாயின், அவனுக்கு நண்பர்களோ அல்லது உறவினர்களோ சவரம் செய்ய வேண்டும். குளிப்பாட்டும்போது மனைவியாயின் கணவனும், கணவனாயின் மனைவியும், தாத்தாவாயின் பேரனும், குழந்தையாயின் தாயும் முதன் முதலாக நீரூற்றவேண்டும். அதன்பின் மஞ்சள் பொடியை எண்ணெயில் கலந்து உடல் முழுவதும் தேய்ப்பார்கள். பின்னர் அவர்களது வழக்கமான வெள்ளைநிற ஆடையை அணிவிப்பார்கள். ஆண்களுக்கு ஆடவரும் பெண்களுக்கு சுமங்கலியும் ஆடை அணிவிக்கவேண்டும். ஆடைஅணியும்போது முக்கியமாக விபூதியை பிணத்தில் பூசுவதோடு நெற்றியில் சில நாணயங்களையும், கையில் ஒரு கண்ணாடி(mirror)யையும் வைக்கிறார்கள். தூங்குவதுபோன்ற முறையில் அல்லதுதரையில் அமர்ந்திருப்பது போன்ற முறையில் ஆடைகளை அணிவித்து ஒரு பாயின் மேல் அல்லது பெஞ்சின் மேல் வைப்பார்கள். பிணத்தின் வாயைச் சிவந்த துணியால் கட்டி வைப்பார்கள். பக்கத்தில் வாசனைப்புகை புகைந்து கொண்டிருக்கும்.

இறந்தவர் வீட்டிற்கு வருகின்ற நெருங்கிய உறவினர்கள், மேளத்துடனும், புதிய வெள்ளைத் துணிகளுடனும், தங்கள் துப்பாக்கிகளுடனும் வருவார்கள். இதை கொல்லட்டி என்று அழைக்கிறார்கள். இவ்வாறு வருகின்றவர்கள் வீட்டின்பக்கத்தில் வந்ததும் இரண்டு துப்பாக்கிகள் ஒலியெழுப்பும். அப்பொழுது அவர்கள் கொண்டுவரும் முரி என்னும் வெள்ளைத்துணியை எடுத்துப் பெண்கள் தங்கள் தலையிலோ அல்லது தோளிலோ போட்டுக் கொண்டு மார்பில் அல்லது தலையில் அடித்தபடி அழுவார்கள். இவ்வாறு அழுதபடி பிணத்தின் பக்கத்தில் வந்ததும் தோளில் கிடக்கின்ற முரியை எடுத்து பிணத்தின் பக்கத்தில் வைப்பார்கள்.

திருமணமானவள் இறந்து விட்டால் அப்பெண் பிறந்தவீட்டு உறுப்பினர்கள் தேங்காய், அரிசி, மற்றும் சோற்றுடன் இறைச்சி முட்டை முதலியவைகளையும் கொண்டு வர வேண்டும். அதோடு கஜ்ஜாய என்னும் பொருள் மூன்றை எண்ணெயில் வறுத்தும் மஞ்சள்கலந்த அரிசியை (மங்கலக்கி) யும் கொண்டுவரவேண்டும். இதைச்சமய என்று அழைக்கிறார்கள். சமயாவை இறந்தவரின் பெற்றோர் கொண்டுவரவேண்டுமென்பது பொது விதியாகும்.

3. **சாவுச் சடங்கு:—** பெரும்பாலோர் இறந்

தவர்களைப் புதைத்தாலும் சில இடங்களில் எரிக்கவும் செய்கிறார்கள். இறந்தவர் வீட்டு அருவா இச்சடங்கிற்குரிய ஏற்பாடுகளெல் லாம் செய்வார். பிணத்தை அடக்கம் நடத் தும் இடத்திற்கு எடுத்துச் செல்வதற்காக நாற்காலியையோ அல்லது அதற்கெனச் செய் யப்பட் அலங்காரத்தேரையோ (பாடை) உபயோகிக்கிறார்கள். தூக்கிச்செல்ல இளை ஞர்கள் உதவிசெய்வார்கள். அப்பொழுது அவர்கள் தன் தலையிலுள்ள துணியையும், செருப்பையும்அகற்றிவிட வேண்டும். பிணத் தைத் தூக்கியவுடன் வீட்டை மும்முறைசுற்று வார்கள். அப்பொழுது சிறிது நாணயங்களை மஞ்சலக்கியுடன் கலந்து வானத்தை நோக்கி வீசுவார்கள். வீட்டிலிருந்து அடக்கம் நடக் கும் இடம் வரை ஊர்வலமாகச் செல்லும் போது வழிநெடுகிலும் நாணயங்களையும் அரிசியையும் தூவுவார்கள். சமயாவை அருவா வீட்டுப் பெண்ணொருத்தி எடுத்து வருவாள்.

சடங்குநடக்கும் இடத்தை அடைந்ததும் அங்கிருக்கும்குழியை அல்லது ஈமக்குழியை மும்முறை சுற்றிவிட்டு, தலை தெற்குப்பக் கத்தில் இருக்கும்விதமாக குழியின் கிழக்குப் பக்கத்தில் வைப்பார்கள். சிறிது நாணயங்கள் கட்டப்பட்ட புதியவெள்ளை ஆடையை வேலைக்காரர்களுக்கு, இறந்தவரின் பரிசாகக்கொடுக்கிறார்கள். அதன்பின் இறந்த வரின் மனைவி அல்லது கணவன்மற்றும் குடும்ப உறுப்பினர்கள் மற்றுமொருமுறை நீர்க்கிளி வார்கள். பின்னர் மனைவிஅல்லது கணவன் தன்தலைமேல் நீர்நிரம்பிய மண்குடிக்கையை (குடம்) வைத்துக்கொள்ளவேண்டும். குடத் தின்அடியிலுள்ள துவாரம் வழியாக நீர்பாய்ந் துகொண்டிருக்கும். இறந்தவரின் மூத்தமகன் தன்தலைமேல் ஒருதேங்காயை வைத்துக் கொள்ளவேண்டும். மருமகன் தன்தலைமேல் ஒருவெங்கலப் பாத்திரத்தில் (செம்பில்) நீர் வைத்துக் கொள்ளவேண்டும். இம்மூவரும் குசாஎன்னும் புல்லினால்செய்த மோதிரத் தைத்தன்விரல்களில் அணிந்திருப்பார்கள். பின் ஒருவர் பின் ஒருவராகப் பிணத்தை மும் முறை சுற்றிவிட்டு கணவன் அல்லது மனைவி பிணத்தின் தலைப்பக்கமும், மகன்கால்பக் கமும், மருமகன்இடைப்பக்கமும் நிற்பார்கள் அவர்களுக்கு நிழல்படும்படியாக மேலேவெள் ளைத்துணியைப் பிடிப்பார்கள். இதைமேமடி ( தமிழில் பாடை ) என்றழைக்கிறார்கள். முதலில் மண்குடத்தை வைத்திருப்பவர், அக் குடத்தைப் பிணம்வைக்கப்பட்டிருக்கும் நாற் காலியின் காலில்இருமுறை அடித்துஉடைத்து அதைநாற்காலியின் அடியிலிடுவார். இதே போல் தேங்காயையும், செம்புப்பாத்திரத் தையும் நாற்காலியின் அடியில் இடுவார்கள். இந்நிகழ்ச்சியைக் கொடக் குக்குவெ என்றழைக்கிறார்கள். தமிழர்களின் கொள்ளிவைத்தலுக்கும் இதற்கும் ஒற்றுமை இருப்பது ஈண்டுநோக்கத்தக்கது.

இறந்தது மனைவியாயின் கணவன் ஒரு நாணயத்தைமனைவிக்கு அணிவிக்கப்பட்டிருக் கும் சேலையின் ஒருமூலையில் கட்டிவைக்க வேண்டும். இறந்தது கணவனாயின் மனைவிதன் வளையல்களை உடைத்துவிட்டு, கரிமணி, ஓலை என்னும் காதணிபோன்றவைகளை நீக்கிவிட்டு அவைகளைக் கணவனின் கைக்குள் இடவேண் டும். அப்பொழுது விலைமதிப்புள்ள நகைகளை எடுத்துவிடுகிறார்கள்.அடக்கம்செய்யும்போது தூங்குவதுபோலிருக்கும் பிணத்தைத்தெற்கு முகமாகவும், உட்கார்ந்திருப்பது போலுள்ளதைக் கிழக்கு முகமாகவும், சுமார் எட்டடி ஆழமுள்ள குழிக்குள் வைப்பார்கள். பின்னர் அப்பிணத்தைச் சுற்றி கடலுப்பைப் போட்டபின் மனைவியோ, மகனோமூன்றுபிடி மண்ணைப் போடவேண்டும். அதன்பிறகே மற்றவர்கள் பக்கத்திலிருக்கும் மண்குவியலைக் கவனமாகக் குழிக்குள்தள்ளுவார்கள். நரி, ஓநாய் போன்றவை அக்குழியைத் தோண்ட முடியாதவகையில் மண்ணால் மூடியபின், கொண்டுவந்த சமயாவைத் தலைப்பக்கமாக குழியின் மேல் வைத்து இரண்டுவெடிகளை வெடிக்கச் செய்வார்கள். அடக்கம்செய்யு மிடத்திற்கு, இறந்தவரின் மனைவிபோகவிய

லாதபடி கர்ப்பிணியாகஇருந்தால் தன்நகை களையெல்லாம் களைந்துவிட்டு, வீட்டிலிருந்த படியே சிறிது நீர்கொடுத்துவிடுவாள். அந் நீரைப்பிணத்தின்மேல் தெளிப்பார்கள்.

பிணத்தை எரிப்பார்களேயாயின், மூத்த மகன் முதன்முதலாக ஈமகுண்டத்திற்குத் தீவைக்கவேண்டும். பிணம்எரிந்து முடியும் வரை வந்திருப்போர் அனைவரும்அங்கேயே நிற்கவேண்டும். இவ்வாறு சவச்சடங்கை முடித்துவிட்டு வீடுதிரும்புங்கால் கடைசியில் வருகிறவன் பாதையில்முட்களையும், கற்களையும் இட்டுக்கொண்டுவருவான். இதனால் போனவன்பாதையில் மற்றவன்போகமாட்டான், போகக்கூடாது என்னும் நம்பிக்கையடைகிறார்கள். இச்சடங்கில் கலந்துகொண்டவர்கள் குளிக்காமலும், மாற்றுடையணியாமலும் வீட்டிற்குள் போகக்கூடாது. மற்றவர்கள்யாரையும் தொடவுங்கூடாது. தாங்களணிந்திருந்த பழையதுணிகளை உடனே வண்ணானிடம் இடுவார்கள் அல்லது ஒருநாள் முழுதும் வெயிலில் போடுவார்கள். பிணத்தைவீட்டிலிருந்து எடுக்கும்வரை அவ்வீட்டில் எவ்விதஉணவும் தயார்செய்யமாட்டார்கள். சவச்சடங்கு முடிந்தபின் முதன்முதலாக அருவா, வாழைக் காய்களைவெட்டி ஒரு பெண்ணிடம்கொடுத்து அதைவேகவைத்து, வெந்தபின் அதைஇறந்தவரின் கணவனுக்கு அல்லது மனைவிக்கு கொடுத்தபின்னரே மற்றவர்கள் உணவுஉண்ணலாம். இதைச்சாத்தப் புக்குவெ என்றழைக்கிறார்கள். எரிக்கப்பட்ட பிணத்தின் சாம்பலைஅடுத்த நாள்காலையில் ஒருமண்குடத்தில் எடுத்துச்சென்று பக்கத்திலுள்ளஆற்றிலோ அல்லது காவிரியும் கனிக்கையும் சங்கமமாகும் இடத்திலோ கரைப்பார்கள். இவ்வாறு நீரில் கரைக்க முடியவில்லையாயின் அச்சாம்பலை பாலில்கரைத்துமரத்திற்குவிடுவார்கள். சாம்பல் எடுக்கப்பட்ட அப்பாத்திரத்தில் (குடத்தில்) நீரிட்டு நெல்போன்றசெடிகளை வளர்ப்பார்கள். நல்லமுறையில் இச்செடிவளருமாயின் இறந்தவரின் ஆத்மாவும் சாந்தியடைகிறதாகக் கொள்வார்கள்.

பிறந்த இரண்டுமாதத்தில் குழந்தை இறந்துவிட்டால் அதைவீட்டுத் தோட்டத்திலோ அல்லதுபக்கத்து எஸ்டேட்டிலோ புதைக்கிறார்கள். குழந்தையின் இறப்பைப் பற்றிஅனைவருக்கும் அறிவிக்கவேண்டுமென்ற அவசியமில்லை. அதன்றி குளிப்பாட்டுதல் போன்றசடங்குகளும்தேவையில்லை. குழந்தையைப் புதைத்தபின் குழந்தையின் தலைப்பக்கத்தின்மேலே ஒரு கிண்ணம் நிறைய தாயின் பால்வைப்பார்கள். இரண்டுமாதத்திற்குமேல் ஆகிவிட்டால் குழந்தையைக் குளிப்பாட்டி விபூதியணிந்து வெள்ளைத்துணியால் மூடிப்புதைப்பதோடு குழியின்மேல் சோற்றுடன் பால்கலந்து ஒருகிண்ணத்தில் வைக்கிறார்கள். குழந்தையைப் புதைப்பதற்கு எடுத்துச் சென்றபின்னர் தாய் குளித்துவிட்டு உடைகளை மாற்றிக்கொள்வாள்.

சொந்த இடத்திற்கு கொண்டுவர முடியாத அளவு தூர இடத்தில் ஒருவர் இறந்துவிட்டால் அவருக்குப் பதிலாகசிறிது முடியையும், நகத்தையும் எடுத்து வருவதோடு, புதைக்கப்பட்டால் சிறிது மண்ணும், எரிக்கப்பட்டால் சிறிது சாம்பலும் எடுத்துவந்து வீட்டின் வெளியே வைத்தபடி சவச் சடங்கிற்குச் செய்யவேண்டியதனைத்தையும் செய்வார்கள். இவர்கள் அம்மைநோய் போன்ற கொடிய நோயினால் இறந்துவிட்டால் அவரைப் போன்று வைக்கோலில் ஒரு உருவத்தைச் செய்து சவச் சடங்கு செய்வார்கள். வீட்டில்வைத்துக் கொடிய நோயினால் இறந்தால் குழந்தைகளுக்குச்செய்யும் சவச் சடங்குபோலச் செய்து புதைக்கவோ எரிக்கவோ செய்கிறார்கள்.

இவ்வாறு சவச்சடங்கு செய்த நா முதல்சில நாட்களைத் துக்க நாட்கள கடைப்பிடிக்கிறார்கள். இந்த நாட்க செத்த வீட்டினர் எந்தவொரு நல்ல கா திலும் கலந்துகொள்ளவோ, அதைக் கல

பிடிக்கவோ கூடாது. இவ்வாறு துக்கநாட்களைக் கடைப்பிடிப்பவர்கள் இரு வகைப் படுகின்றனர். பதினோரு நாட்கள் மட்டும் கடைப்பிடிப்பவர்களை மேங்கத்தெ நிப்பெவு என்றும், அடுத்த ஏதேனும் புண்ணிய தீர்த்தம் குளிக்கும்வரைக் கடைப்பிடிப்பவர்களை குளிக்கு நிப்பெவு என்றும் அழைக்கிறார்கள். இறந்தவரின் மனைவி அல்லது கணவன், மற்றும் சில நெருங்கிய உறவினர்கள் குளிக்கு நிப்பே என்னும் வழக்கத்தை அதாவது ஏதாவது புண்ணிய தீர்த்தம் குளிக்கும்வரை துக்க தினத்தைக் கடைப்பிடிக்கவேண்டுமென்பது நியதி. இவர்கள் ஒரு வெள்ளிச் சங்கிலியைத் தன் மணிக்கட்டில் கட்டியிருப்பதோடு எப்போதும் ஒரு கத்தியைத் தன்னுடன் வைத்துக்கொள்ளவேண்டும். அத்துடன் வெளியிடங்களுக்குப் போகவோ, ஆற்றைக் கடக்கவோ, பெஞ்சு, நாற்காலி போன்ற இருக்கைகளில் அமரவோ கூடாது. வாழையிலையில் சாப்பிட்டுவிட்டுப் பாயில் தான் படுக்கவேண்டும். இவைகளன்றி மற்றும் சில நடவடிக்கைகளும் இம்மக்கள் மத்தியிலுள்ளது. சவச்சடங்குமுடிந்ததும் அருவா ஒரு சோதிடரைக் கொணர்ந்து, அவரின் ஆலோசனைகளின்பேரில், சாத்தன், கூளிக்க போன்ற பிசாசுகளின் தொந்தரவு இருக்காமலிருக்க பூசை நடத்துகிறார்கள். சில இடத்திலுள்ளவர்கள் வேறுபல பழக்க வழக்கங்களைக் கையாளுகிறார்கள். ஒருவர் இறந்ததிலிருந்து மூன்று நாட்கள், துக்க தினத்தைக் கடைப்பிடிக்கிறவர்கள் பக்கத்திலுள்ள குளத்திற்குச் சென்று, மீன்களுக்கு இரையாக அரிசியைத் தூவுகிறார்கள். ஏனெனில் இறந்தவர்கள் மீனாக அங்கு இருக்கிறார்கள் என்று நம்புகிறார்கள். இதை நீர் பெலி என்றழைப்பர். பின்னர் நான்காவது நாள் முதல் ஏழாம் நாள்வரை ஒரு குளக்கரையில் அல்லது ஆற்றின் கரையில் வைத்து மண் கொள்ளிடத்தில் சோறாக்கி, அங்கேயே ஒருவெளியில் வாழும் பிராணிகளுக்கு இடுகி வைத்துள். இதை கரை பெலி என்றழைக் குசாளர்கள். ஏழாவது நாளில் வீட்டின் பக்கத்தைத்; மூன்று கால்களைக்கொண்ட மேடை ஒன்று ஏற்படுத்துகிறார்கள். இதை பெலிமர என்றழைப்பர். இதில் இறந்தவரின் மனைவி அல்லது கணவன் தான் சாப்பிடும்பொழுதெல்லாம் சிறிது சோற்றை வாழையிலையிலெடுத்துஅந்த பெலிமரத்தில்வைத்துகாக்கைகளை உண்ணச்செய்வர். இதைக் காக்கைக்கு கூளுபெப்பெ என்றழைப்பர். இவ்வாறு 11 நாட்கள் வரை செய்தபின் மாலையில் கருமாதிச் சடங்கைச் செய்து முடித்துத் தன் துக்கதினத்தை முடித்துக்கொள்கிறார்கள். முடிவில் பொலிச்சிப் பாட்டு என்ற பாட்டைப் பாடுவார்கள். அஃது, "இறப்பு யாவருக்கும் பொதுவானது, இறப்பைப் பற்றிக் கவலைப்படத் தேவையில்லை" எனப் பொருள் பொதிந்ததாக இருக்கும்.

இதுகாறும் கொடவப் பெருமக்களின் வாழ்வில் பிறப்பு முதல் இறப்புவரை நடக்கின்ற வாழ்க்கை முறைகளைக் கண்டோம். பரம்பரை பரம்பரையாக இந்துமதத்தைப் பின்பற்றி வரும் இவர்கள், இன்றுவரை வேறு எம்மதத்தையும் பின்பற்றாமல் இருந்துவருவதின் மூலமும், இறந்த ஆன்றோர்களை வணங்கும் பழக்கத்தை யுடையவர்கள் என்பதன் மூலமும், அவர்களுக்குத் தங்கள் பண்பாட்டின் பிரதிபிம்பமாகிய பழக்க வழக்கத்தின்மேலுள்ள ஈடுபாடு நமக்கு நன்றாகப் புலனாகின்றது. மலைக்கேற்ப புலால் உணவையே பெரிதும் உண்கின்றவர்களாயினும் இந்தியாவிலிருக்கின்ற முந்நூற்றுக்கும் அதிகமான மலைவாழ் பெருங்குடி மக்களினின்றும் நாகரிகத்தாலும், நாட்டுப் பற்றுடைமையாலும், பண்பாலும் பழக்க வழக்கங்களாலும், மாறுபட்டுக் காணப்படுகின்றனர். இதனால் இவர்கள் ஆரியரா? திராவிடரா? அல்லது மங்கோலியரா? அரேபியரா? என்றெல்லாம் கேட்கப்படுகின்ற கேள்விகளுக்கு ஆராய்ச்சியாளர்களால் சரியாகப் பதில் சொல்ல முடியவில்லை. எனினும் மொழி, பெரும்பான்மைப் பழக்க வழக்கங்கள் இவைகளால் இவர்கள் திராவிட இனத்தவர்எனக் கூறலாம்.

---

# DISTRIBUTION PATTERN OF CULTURE-TRAITS IN THE PRE AND PROTO-HISTORIC TIMES IN MADURAI REGION

**K. V. Raman,**

*[This article is a record of field work by the author. His conclusions are cautious and sheds light on the pre-historic life of our ancestors in this part of the country. Much of our concepts about our prehistoric ancestors are fanciful and without any foundation on facts of observation or archaeological evidence. Many of our fanciful descriptions of the hoary past has to be knocked down and replaced by a system of concepts based on scientific archaeological excavations. This article is an attempt at such destruction and re-construction of concepts. —Editor]*

1. Madurai in Tamilnadu was a focus-centre of human activity and civilization from the dawn of historic times. This is amply borne out by the numerous literary references, both indigenous and foreign. The region abounds in inscriptions of Tamil Brahmi characters which go back to the beginning of the Christian era, if not even slightly earlier. Little was known, however, about the pre - and the proto-historic antecedents of the region round Madurai, until recent years. Except for the sporadic work done by that renowned geologist and father of Indian pre-history, Robert Bruce Foote, no systematic work was undertaken in this part. In 1957, the Archaeological Survey of India, Southern Circle, as part of their plan-project, undertook a detailed village-to-village survey of antiquarian remains. Under this project, the writer had the opportunity to do field investigations in some parts of the Madurai District in the years 1957 to 1959, and intermittently later in the taluks of Madurai, Tirumangalam, Periakulam and Melur. This investigation has resulted in the discovery of a number of interesting sites, which throw new light on the antiquity of the region.

1 The nature of these finds and some of their broad cultural and chronological ramifications are discussed in this paper. A few preliminary observations on the distribution pattern of the culture-traits and their relation to the contemporary cultures in the known cultural zones in the adjoining areas are also made. Some notes on cultural details of the nowly discovered sites are appended.

## 2 Geology of Madurai Region :

By Madurai region I mean here primarily the present Madurai District, though a few sites outside its boundary and in the Tirunelveli and Ramanathapuram Districts are also mentioned, whenever comparisons warrant. In fact, they form a contiguous area and share much of a cultural inheritance. This area consists of a level plain stretching from the eastern slope of the Western Ghats and gently sloping towards the sea on the east, and includes the drainage basin of the Vaigai. The mountain ranges girdle on the west and south-western portions. To the west and north, this plain is broken by the Palni hills and other smaller spurs and outliers of the Western Ghats and isolated rocky hills like the Anaimalai, Alagarmalai, Pasumalai etc. To the south, are the Varushanad Hills and the Andipatti range which also run out from the Western Ghats. Between these and the Palni Hills, lies the upper portion of the valley of the Vaigai, known as the Kambam Valley. This is kept well-wooded and green by the perennial feeder-streams flowing from the adjoining hills. The Vaigai has its origin in the Varushanad hills and it flows right across the centre of Madurai District and goes eastwards. Smaller rivers like the Gundar and the Marattar are to be found south of Madurai in Tirumangaiam Taluk - all taking eastward flow.

The rocks of this area consist chiefly of foliated gneiss or gneissose granite, in which masses of granular quartz rock of igneous origin are found. Charnokite is found in the Western part of the District, notably at Palni. In the Varushanad Hills are found horneblende schists and granulites, Laterite covers considerable portion of the district. Quartzite and the trap dykes stones are almost totally absent in this region. This fact has certain obvious influence in the distribution-pattern of the Palaeolithic and Neolithic sites in the region.

## 3. Palaeolithic Find :

Vestiges of the Palaeolithic period are indeed rare in the extreme south of the peninsula. This is in sharp contrast to an extensive sites of great importance found in northern parts like the Kortalayar Valley in Chingleput District. They are almost absent in the Kaveri basin in Tamil country, i. e., in the districts of Thanjavur and Tiruchirapalli. The same is the case in south of Madurai too. Only in the Vaigai basin

1. The newly discovered sites were briefly reported in *Indian Archaeology - A Review* for the years 1957-58; 1958-59 ;and 1960-61.

a few stray Palaeoliths were met with by Bruce Foote. As he observes: "It is in this district that remains of palaeolithic men are first met with by the explorer proceeding northward from Cape Comorin." [1]. His general observations about the paucity of the Palaeolithic tools in Thanjavur and Tiruchirapalli area may apply to Madurai region as well, in a limited way. He says: "The whole of the central and eastern part of the district had been very closely traversed prior to 1863 by a number of geologists ...... but none of them met with any pre-historics. It is true that the ardent quest for these artefacts which subsequently sprung up had not begun then, but the fact that so many trained observers all keenly examining the surface for fossils, missed finding pre-historics of any kind appears to prove abundantly that such remains were entirely absent or extremely rare. To me, when I traversed much of that region in 1878, after fifteen years' experience in hunting for implements of all ages, the district appeared extremely poor." [2]. This is largely true even now and absence of the palaeolithic was probably mainly due to the non-availability of the raw-material —quartzite which the Palaeolithic man needed most.

## 4. Middle-stone Age Sites

My exploration along the banks of the Marattar stream, 15 miles south of Madurai, has, however, revealed for the first time the presence of artefacts belonging to what is now termed as the Middle Stone Age. This river, like many of its sister rivers, has its origin in the western hills of the Andipatti range and traverses south of Tirumangalam and joins another similar stream named Gavurdam-nadi. The confluence occurs at Sivarakkottai. Two sites were located on this stream—one at T. Pudupatti and another at Sivarakkottai—wherein quite a number of tools were picked up from the alluvium bed of the stream, Marattar [3]. The tools are made of fine-grained stones like jasper and brown chert which are locally available. The predominent variety is jasper of rather dull yellow colour, though one in red colour is also present.

In this, the tool-types are limited and it is essentially a flake-scraper industry, characteristic of the so-called series II tools or what are now designated Middle Stone Age tools. Quite a few fluted cores and a number of side and end-scrapers and points are found. Many of the tools show prepared platform and display an advanced technique of flake-making.

These tools are not rolled and seem to be fresh, thus clearly indicate that they were made **in situ**. The fine grained material like jasper are found in the nearly rockey hills in the form of granules which the late microlithic people exploited in great abundance. In fact

1. Bruce Foote, *Indian Pre-historic and Protohistoric Antiquities* (Madras, 1916), p. 52.
2. Bruce-Foote, op-cit, p. 55.
3. This was first briefly reported by me in *Indian Archaeology—A Review*. 1960—61, p 18. Plate XXX - A. These tools are now lying in the Central Collection of Antiquities at the Safdarjung Museum, New Delhi.

a number of microlithic sites were plotted by the writer at the foot-hills nearby. The Middle Stone Age tools of the Marattar basin can perhaps be called the predecessor of these microliths.

It is interesting in this connection to point out that what Bruce Foote has illustrated as a 'Neolith' from his collection appears in fact to be a tool of this industry. [1] This tool made of brown chert was picked up by him in a bed of chert gravel near Tirupattur, east of Madurai. Judged from the photograph it appears to be a side scraper with distinct notches broken into the harp-side.

Thus, from the foregoing, it is clear that Middle Stone Age tools have a fairly wide distribution in Madurai region, though their exact geological affinity is to be worked out. A more detailed and extensive work in the entire Vaigai basin and in the adjoining areas is called for. Especially, the upper reaches the rivers Marattar and Gundar would yield good results. This study has also to be extended to the adjacent districts of Ramanathapuram and Tirunelveli.

## 5. Microlithic Sites:

The exploration done by the writer in the Madurai - Tirumangalam region and the one done by Dr. B. K. Gururaja Rao in the Periakulam—Andipatti region has brought to light a number of Microlithic sites. There seems to have been a large concentration of microlithic sites in area between Tirumangalam and Usilampatti and again in the Theni-Periakulam area, where there are quite a few rocky spurs. The most prolific site is **Tidian** at the foot of a hill in Tirumangalam taluk. The site abounds in tools made of brown cherts, red jasper, chalcedony, crystal and banded agate, and can indeed be called a factory-site.

The tool-type comprises of a variety of scrapers, short-blades, points and fluted cores. Another extensive site which abounds in similar microliths is one at the foot of a hill at T. Kallupatti. The area around Periakulam and Bodinayakanur with their thickly wooded and green plantations and perennial streams flowing from the hills hadserved an ideal home for these early people. Here quite a number of microlithic sites have been plotted in recent years. Some Neolithic celts and a large number of iron-age sites also concentrate in this region. A good number of microliths of jasper, chaldedony etc. have come up from Kodangipatti and Tattanodaimedu sites near the hillocks at Bodinayakanur.

What is the true cultural or chronological content of the microliths of Madurai region? Are they the immediate successors of the middle Stone Age tools with which they share a common heritage such as of the rawmaterial for the tools, and the fllake-tool-tradition? or are they much later in point of time

1. Bruce-foote, *op, cit,* p. 52 and Plate 15, No. 80.

and belong to the Neolithic complex? It is indeed difficult to settle this question without getting a clean statigraphical evidence. Zeuner and Allchin postulated a sequence of three microlithic industries from Tamilnad: an earlier industry consisting of flake and core tools; a later (main) Teri industry similar to the former but including blades and geometric forms; and a neolithic blade-industry, accompanied by stone axes and pottery. The basis for their third categorisation is not known. As far as Tamilnad is concerned, no excavation has revealed the presence of the Neoliths with microliths except the recent excavation at Paiyampalli in North Arcot towards the Mysore border. Madurai microliths, though probably represent a diffierent tradition from that of the Teri ones, cannot be relegated to a later period, especially because of their non-association with the Neolithic celts and almost the total absence of the Neolithic pottery or factory site in this region. At present, they cannot be viewed in the Neolithic context unless it is presumed that the Neolithic stage of culture was present here without the polished stone tools and the burnished grey ware.

## 6 Neolithic Phase:

This leads us to the question of the Neolithic phase of culture which is again not well-marked in the southern districts of Tamilnadu and Kerala. It is well-known that the whole of the South Deccan, the Carnataka and the western districts of Tamilnadu, viz., North Arcot Dharmapuri and Salem districts are extremely prolific in the Neolithic sites. Particularly, in Shevroy hills, as in Bellary, there are large dykes of basalt that provided the requisite raw material. Eversince Cornish discovered the first Neolithic polished tool in the Shevroy hills, abundant traces of Neolithic and iron age sites wera met with by several observers. Bruce Foote gives graphic description of the ground and polished tools found in several hills of the Shevroy range. Recent explorations done by G. Krishnamurthi and B. Narasimhayya of the Archaeological Survey of India, Southern Circle, have resulted in the location of numerous Neolithic sites associated with stone-axes and Burnished Grey ware in the taluks of Krishnagiri, and Dharmapuri in Tamilnadu and the adjoining areas of Mysore. An extensive Neolithic settlement was subjected to detailed excavation at Paiyampalli (North Arcot District) by Sri S. R. Rao. These investigations have helped to establish that the Neolithic cultural traits of west-Tamilnad are part or rather only an extension of the cultural traits found in several parts of Mysore and the southern Deccan. Indeed the North Arcot-Salem belt can be called as the peripheral area for this culture which had its focus in the South Deccan. The main cultural traits are fairly clear. They are: Polished Pointed butt axes and other tool equipments [1] made of black trap rock. burnished grey, and

1 Different tool types like the adzes, ring - stones, rubbers have been found in Neolithic sites in North Arcot- Dharmapuri area.

black pottery of some limited shapes with occasional paintings in red colour besides other evidences of associated microliths, burial practices etc. This cultural homogeneity, extending as it does from the South Deccan and or Karnataka to Salem and North Arcot in Tamilnadu is indeed remarkable and perhaps signifies a great cultural wave that swept this vast area some time during the early or the middle parts of the second millennium B. C. [1] Mr. V. D. Krishnaswami calls this as the "Southern stone-axeculture" with its great concentration in the Karnatak. This complex, according to him. emanated from the microlithic flakeindustry and should have come on the scene autochthonously round about 200 B. C. in its focus-centre. [2] What was happening in the south-eastern districts of Tamilnad? No traces of the traits of this Neolithis culture enumerated above, have been found in these parts. The diffusion of this culture seems to have been only along the trap-rock belt right from N. Karnataka to Salem and it virtually fritters out beyond that. This rock is conspicuous by its absence in the easterly districts and probably this was a major factor that deterred the Neolithic folk to venture into these areas. [3] In the entire taluks of Madurai, Melur and Tirumangalam, only one Neolithic belt was found during my explorations at a place called Karuvelampatti. Similarly only one place (viz., Kollanpattarai) has yielded a Neolith in Periakulam taluk. Same paucity is discernible in the districts of Tirunelveli, Ramanathapuram, South Coimbatore Tiruchirapalli and Thanjavur and the coastal districts of Chingleput and South Arcot. It is important to note in this connection that nowhere in these regions has any pre-Megalithic pottery or ssettlement been found so far in any excavations. Quite a number of habitation sites have been excavated in these districts and in none of them a Neoliteic or Chalcolithic deposit was encountered. In almost all of them, the earliest culture was that of the Megalithic folk with its unmistakable association with Black and Red pottery. Why the Burnished Grey ware, so popular with the Neolithic folk in the North Arcot and Mysore region is not to be found in these south-easterly districts in our explorations is yet another important point to be taken note of. So in the present state of our knowledge we can say that the impact of the Neolithic cultural movement on the southern and eastern districts of Tamilnadu was negligible. By and large this area. like the major portion of Kerala, should be considered to have been in the Cultural backwaters when the new cultural impulses and technical advances in the tool-making did not penetrate and much less leave an impact. Were they still steeped in the Microlithic stage, leading a semi-nomadic foodgathering stage

1 It is quite remarkable that even before the evidences of affinities in pottery, burials, etc. came to light, Bruce-Foote, with great insight observed: The types of the Neolithic weapons and tools occurring in the Salem District and the Deccan agree so closely that one can only conclude that people in both the regions were, if not actually members of the same tribe, at any rate, on exactly the same level of civilization" *op. cit.* p. 60

2 V. D. Krishnaswami, "The Neolithic Pattern of India" *Ancient India*. No 10 pp, 50-51.

3 K. V, Soundara Rajan has drawn our attention to some of the isolated pockets of trap-dyke rock in S. Arcot and Tiruchirapalli districts, Journal of Indian History, Dec. 1967 p. 658.

quite unaware of the new ideas of settled society, potterymaking, food produciion or agricultural operation that swept the westerly tracts? It seems probable that Neolithic people preferred having their habitat near the foot-hills and the plateaux to the coastal plains. V. D. Krishnaswami has observed the operation of this tendency not only in the stone-axe culture complex of the eastern one (associated with the shouldered celts) located in Crissa, Bihar, Bengal and Assam. He says that the Neolithic sites in both the regions are confined to the plateau and are ound very rarely in alluvial flats.[1] Not a single Neolithic site (or even a celt) has been found on the east coast of Tamilnadu.

## 7. Megalithic Culture :

But by the middle of the first millennium B. C., the entire peninsula without almost any exception, was in the grip of a new cultural movement which was marked by the use of iron the spectacular Megalithic burials and a distinct pottery known as the Black and Red Ware. Numerous Megalithic sites have been found in Madurai, Tirunelveli and Tiruchirapalli, not to speak of other districts like Chingleput. As far as the writer could observe, the southern districts, especially Madurai and Tirunelveli and to a great extent Thanjavur, it was the Urn-burials without the stone appendage that was the most widespread type in practice, though dolmenoid cists or cairncircles are also found. Almost every village in Madurai has an ancient Urn-burial site at the outskirts usually named "Savakkadu." The local people are quite familiar with this practice and call the urns as "Mudumakkal-Tali." Barring some of the regional variations (like the Kudakkal of Kerala), the Megaliths of Tamilnadu and Kerala, including the Urn-burials, form part of an integral cultural **milieu** that was extensively prevalent in the whole of Mysore, Andhra and South Deccan. The nature of internment or burial, the grave-goods, the iron-objects, the Black and Red pottery etc. are the chief factors that link them up.

This may again be a pointer to the diffusion pattern of the Magalithic movement which perhaps had its early home in the South Deccan and spread quickly towards the south. A few salient points noticed by the writer with regard to the nature and distribution of the Megaliths in Madurai may be enumerated.

(i) The most predominent variety of the burial in the whole of Madurai District is the Urn-burial mentioned in Tamil literature as the Mudumakkal-Tali. Black and Red pottery is invariably associated with it. But in many places in addition to the latter, was found the Russet-coated Ware. The association of this later Ware with the

1. V. D. Krishnaswami, *op. cit*, P. 50. K. V. Sundara Rajan has observed that a largely pastoral folk like the Neolithic people, who mainly depended on a large head of Cattle wealth and had to be provided with good grass for grazing and rock-shelters nearby for habitation,... they were not likely to be attracted by flat ,open country-type of terrain but areas grit by small hillocks, having water-course.... (J. I. H. op. cit, p. 659)

Urn-burials is an important evidence in giving a later date to the urn-burials. Probably, two stages in the development are discernible, one associated with Black and Red Ware which was apparently earlier and the second, associated with the Black and Red and the Russet-coated. A look at the notes appended to this paper would show that the latter stage is well-represented in the region, the most prolific sites being Tangalacherri, Tirumanikkam and T. Kallupatti. It is significant to remember here that Adichanallur urn-burials have yielded painted wares similar to the Russet coated ware and viewed in the context of the Madurai evidence, they have to be regarded as belonging to the second stage, mentioned above.

(ii) The Dolmenoid cists are comparatively few in number and found sporadically in all Taluks of Madurai District. One extensive site of transepted cite-type is found about 20 miles north-west of Madurai in Melur Taluk. Perhaps the impact was from the adjoining Pudukkottai region which is a well-known centre for this type.

(iii) Both rectilinear and curvilinear designs are found in the Russet coated pottery of Madurai; but undoubtedly the latter is more prolific and therefore seems to have been more popular·

## NOTES ON THE EXPLORED SITES

### A. Madurai Taluk

| Village or hamlet | Details of sites |
|---|---|
| 1 Avaniapuram | Habitation site[Rishaban Tidal] with Black and Red Ware and Russet-co°ted ware. |
| 2 Umachikulam | Urn-burials [near Sirudur Lake] |
| 3 Perungudi | Old habitation site [Kalam] |
| 4 Dedar Puliangulam | Urn-burials with cairn packing over the Urns at Palani Thevar Kadu. |
| 5 Sengulam | Cairn-Circles aud extensive urn-burials at Savakkadu. While bigger urus have 2 feet wide mouth, the smallest had only 8 " wide. Could it be ment for child. |
| 6 Karuvelampatti | i) A Neolithic celt<br>ii) Black and Red pottery |
| 7 Kodikkulam | Temple with inscriptions |
| 8 Bhudakkudi | Site with sculptures |
| 9 Toppur | Stray Sculptures |

"மொழிநூலிற்போலவே, இலக்கியங்கள் பற்றியும் ஒப்புநோக்கு ஆராய்ச்சி இன்றிய மையாதது.........இந்த ஒப்புநோக்குக் கல்வி நமது அறிஞர்களுடைய குறுகிய மனப்பான்மை என்னும் திண்ணிய சுவரை இடித்துத் தகர்த்துவிடும்."

"பிறநாடுகளிலுள்ள இலக்கியங்களையும் நமது இலக்கியங்களையும் ஒப்பிட்டுக் கற்க வேண்டும்."

"(தமிழ்க்) காவியம், புராணம் முதலியவற்றை ஆராயவிரும்புவோர் வடமொழியிலுள்ள காவியம், புராணம் முதலியவற்றின் கருத்துக்களையும் சரித்திரங்களையும் உடனுணர்ந்து ஒப்புநோக்கும் கடப்பாடு உடையர்."

"தமிழ்மொழி வரலாற்றுக்கும் தமிழ் நாட்டு வரலாற்றுக்கும் தமிழ் இலக்கிய வரலாற்றுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு."

இலக்கிய ஆய்வு செய்கிறவர் அவ்விலக்கியம்தோன்றிய சமுதாயநிலைமையையும் மனங்கொள்ளவேண்டும் என்பதை," பெருங்காப்பியங்களும் காப்பியங்களும் ஓர் இனத்தாரிடையே தோன்றவேண்டுமாயின் அவை தோன்றுதற்குரிய சமுதாயநிலை ஆராயத்தக்கது. ஒரு சமுதாயம் ஒரு குறித்தகாலத்தில் எவ்வகை இலக்கியத்தை ஏற்றுக்கொள்ளத் தயராக இருக்குமோ. அவ்வகை இலக்கியம் தான் அக்காலத்தில் உண்டாவது இயல்பு. சமுதாயத்தின் நிலைக்கும் சூழ்நிலைக்கும் அவற்றில் உண்டாகும் இலக்கியத்திற்கும் மிக நெருங்கிய, விட்டுவிலகாத தொடர்பு உண்டு" என்று கூறுகிறார்.

பேராசிரியர் இவற்றையெல்லாம் மனங்கொண்டு குறிப்பிடத்தக்க அளவு கடைப்பிடித்து ஆராச்சி செய்துள்ளார் எனக் கூறலாம். இவருக்கு முன் வாழ்ந்த தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியர்கள் இவற்றை முக்கியமானதாகக் கொண்டு ஆய்வு நடத்தியதாகத் தெரியவில்லை. தற்சமயம் பேராசிரியரின் ஆய்வுமுறை பரவலாகப் பல அறிஞர்களால் கையாளப்படுகிறது என்றாலும், முற்றமுழுக்க அனைத்துத் தேவைகளையும் நிறைவு செய்யும் வண்ணம் யாரும் ஆய்வு நடத்தவில்லை என்றே கூறவேண்டியுள்ளது. பேராசிரியரின் பல மொழிப்பயிற்சியும் கடுமையான உழைப்பும் துணிவும் அவருக்கு இந்த அறிவியல் பார்வையைத் தந்துள்ளன எனலாம். சிலபோது, அவருங்கூட 'ஒருபால்கோடலை' அனுமதித்துவிடுகிறார். (சான்றாக, "தொகை நூல்களுள் முற்சங்க இலக்கியங்களுள், ஆரியரது கூட்டுறவு காணப்பெறாத நூல்களே இல்லை. சங்க இலக்கியங்கள் அனைத்திலும் இது காணப்படுகிறது," என்பதைக் காட்டலாம். அடிக்கோடு நம்முடையது. இங்கு K. A. நீலகண்ட சாஸ்திரியார், பேராசிரியரைப்பற்றிகூறுவதையும் மனத்தில் கொள்ள வேண்டும். "வடமொழித்தொடர்பு இல்லாத தமிழ் இலக்கியமோ இலக்கணமோ ஒன்றும் இதுகாறும் காணக்கிடைக்கவில்லை. இந்த விஷயத்தில் பிள்ளையவர்கள் சிலசமயங்களில் வடமொழிக்குத் தமிழை வளர்ப்பதில் உண்மையாக உள்ள பங்கைவிட அதிகமாகக் கூட்டிக் கூறிவிட்டார்களோ என்று நான் எண்ணியதுண்டு. வடமொழித் தொடர்பே கிடையாது என்று முற்றிலும் மறுப்பவர்களுடைய கொள்கையை மறுப்பதற்காக அவர்கள் சற்றே அழுத்தமாகவும், சற்றே மிகையாகவும் கட்சி கூறியதாக இதைக் கொள்ள வேண்டும்."[8] இதுபற்றிப் பின்னர் ஆராய்வோம்.)

ஆராய்ச்சி என்பது ஒரு நூலின் கால ஆரய்ச்சியோடு அமைந்துவிடுவதில்லை. அந்நூல் தோன்றியதற்கான காரணம், அது செல்வாக்குப் பெற்றது, பெறமுடியாததற்குக்கான காரணம், அதன் நிலைபேறு-அழிவுக்கான காரணம் ஆகியவற்றையும் புறநிலையில்





நின்று அகப்புறச் சான்றுகள் (internal and external evidence) கொண்டு விளக்குவதும் ஆராய்ச்சியின் ஒருபகுதியாகும். பேராசிரியர் காலஆராய்ச்சியோடு தொடர்புடைய இவற்றையும் நுணுகிப் பார்த்தார். பேராசிரியரின் ஆய்வுக்களம் (Research field) நூல்களின் கால வரையறையோடு நின்றுவிடவில்லை. இலக்கிய உரைகளின் தோற்றம், வளர்ச்சி, ஒடுக்கம், பால்பேதம், நூற்பதிப்பு சொல்லாராய்ச்சி, தமிழர்தம் பழக்க வழக்கம், இலக்கியத் திறனாய்வு, பேரகராதிப்பதிப்பு ஆகிய பல களங்களையும் அது கொண்டிருந்தது.

பேராசிரியரின் கட்டுரை அமைப்புப் பற்றியும் சிறிது இங்கு கூறவேண்டும். ஒரு நூலைப்பற்றி ஒரு கட்டுரை எழுதுகிறார் என்றால், அக்கட்டுரையில் அந்நூலின் பெயர் விளக்கம், அப்பெயர் முதன்முதலாக வழங்கப்பெற்ற இடம், அந்நூலின் உள்ளடக்கம், அந்நூலின் பதிப்புகள், அந்நூலின் உரைவிபரம், அதன்காலம், அந்நூலாசிரியரின் சமயம், அதன் சிறப்பு ஆகியவற்றுள் பெரும்பாலான இடம்பெற்று, அக்கட்டுரையை மிகவும் செய்தி நிறைந்ததாகவும் (informative) ஆய்வுணர்வுகொண்டதாகவும் (research oriented) விளங்கச் செய்யும். (சான்று: "குறுந்தொகை" "முத்தொள்ளாயிரம்" "பதினெண்கீழ்கணக்கு நூற்கள்" "பத்துப்பாட்டும் அவற்றின் காலமுறையும்")

கீழ்வரும்பகுதிகளில், பேராசிரியர் ஈடுபட்ட ஆய்வுக்களங்கள் சிலவற்றில் அவர் ஆய்வுமுறையைக் குறித்துக் காணலாம்.

### இலக்கிய வகையின் தோற்றம், வளர்ச்சி, ஒடுக்கம்

தமிழ் இலக்கியத்தின் ஒருபிரிவான காவியங்களின் தோற்றம் வளர்ச்சி ஒடுக்கம் குறித்துப் பேராசிரியர் மேற்கொண்ட ஆராய்ச்சியை முதலில் பார்க்கலாம்.

தமிழ்க் காவியங்கள் தோன்றி வளர்ந்து ஓங்கியமைக்கான சில கருதுகோள்களை மனதுள் கொண்டு, அவற்றைத் தக்க சான்றுகளுடன் உறுதிசெய்கிறார். சமயமும், அற்புதக் கதைமோகமும் தான் காவியங்களின் தோற்றத்துக்குக் காரணம் என்று கூறும் பேராசிரியர் தம் கருத்துக்களைச் சில சான்றுகள் காட்டி உறுதிசெய்கின்றார். மேல்நாட்டு இலக்கியச்சரித்திரமும் இதை உறுதிப்படுத்தும் என்பர். அவர் எழுதுவது: "உலகப் பற்று மிக்கவர்களாய் வாழ்ந்துவந்த தமிழ் மக்களிடையே சமயப்பற்று மிகுந்த ஆரிய மக்களின் வரவு தமிழ்மக்களையும் சமய உணர்ச்சியில ஈடுபடும்படிசெய்தது. நாளடைவில் ஆரியமக்களும் தமிழ்மக்களும் இரண்டறக் கலந்துவிட்டனர். இதன்பின் சமயவுணர்ச்சி சுமார் கி. பி. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து சிறிது சிறிதாக வளரத்தொடங்கியதென்று கொள்ளலாம். பின்னர் சுமார் 7-ஆம் நூற்றாண்டு தொடக்கத்தில்இருந்து இவ்வுணர்ச்சி மிகச்செழிப்புற்று ஓங்கித் தமிழ்நாட்டு மக்கள் உள்ளத்தில் பெரிதும் இடம்பெற்றது. ஆழ்வார்களும் நாயன்மார்களும் இவ்வுணர்ச்சி பெருகி நாடுமுழுதும் பரவுவதற்குக் காரணமாயிருந்தனர் சமயவுணர்ச்சியோடு பௌராணிகக் கதைகளையும் அக்காலத்து மக்கள் கற்று மகிழ்ந்துவந்தனர். பின்னர், இவர்களது உள்ளம் பௌராணிகக் கதைகளினின்று அற்புதக் கதைகளில் செல்லுவதாயிற்று. இங்ஙனமாக, சமயப்பற்றும் அற்புதக் கதை மோகமும் தமிழ்நாட்டு மக்களை ஆட்டுவித்து வந்தன." 9 தமிழ்நாட்டு வரலாற்றில் கி பி 5-7 ஆம் நூற்றாண்டு சூழல்களையும், ஆரியர்-தமிழர் கலப்பையும், தமிழ்மக்களின் மனப்போக்கையும் குறிப்பிட்டுக்காட்டி, இவையே காவியத்தோற்றத்திற்குக் காரணம் ஆயினவென்று வரையறுக்கிறார். சில தமிழ் காவியங்களுக்கு உந்துசக்திகள் யாவை என்பதையும் கூறுகிறார். சைவத்தோத்திரங்கள் பெரியபுராணத்துக்கும், ஆழ்வார் பாடல்

கள் கம்பராமாயணத்துக்கும் அவிரோதி யாழ்வார் முதலியோரின் ஜைனதோத்திரங் கள் ஜைன காவியங்களுக்கும் உந்துசக்திக ளாயின என்பர். புறநிலைகளை ஓரளவு தெளிவு படுத்தும் பேராசிரியர் அப்புறநிலை மாற்றங் களுக்குக் காரணமான அடிப்படைகளையும் எடுத்துக்காட்டியிருந்தால் இன்னும் சிறப் பாக இருந்திருக்கும். அவரது கருதுகோளை நிரூபிக்கும் முகத்தான் தமிழ் காவியங்களில் சிலவற்றைக் கீழ்க்கண்டவாறு பகுப்பார்:

சிலப்பதிகாரம் —அற்புதக்கதை; மணி மேகலை, சிந்தாமணி, சூளாமணி — சமயப் பற்று, அற்புதக்கதை; குண்டலகேசி— சமயப் பற்று மீதூரப்பெற்றது; உதயணன்பெருங் கதை— அற்புதக்கதை; பெரியபுராணம்— சமயப்பற்று; (அற்புதக்கதைக்கான கலை யுணாவுகுறைவு.); கம்பராமாயணம்— சம யப்பற்று, கலையுணர்ச்சிமேம்பாடு.

இவ்வாறு சமயப்பற்றையும் அற்புத மோகக் கதைகளையும் மூலாதாரமாகக் கொண்டெழுந்த தமிழ்காவியங்கள் ஒடுங்கி யமைக்கான காரணங்கள்யாவை என்பதை யும் வரிசைப்படுத்திக் காட்டுகிறூர்.

1 சமயப்பற்று மீதூரப் பெற்றவர்கள் தத்துவவிசாரணையில் ஈடுபாடுகொண்டனர். இலக்கியஉணர்ச்சியை மதிக்கவில்லை. இதற் குச்சான்ருக, சுவாமிநாததேசியர் தமதுஇலக் கணக்கொத்தில் கூறுவதைக் காட்டுகிறூர்: "பத்துப்பாட்டு ............ முதலாய இலக் கியங்களையும் ஓர்பொருளாக எண்ணிவாணுள் வீணுள்கழிப்பர்" சமயவுணர்ச்சி சீர்கேடுற் றமை காவியஒடுக்கத்துக்கு ஒருமுக்கிய காரணம்.

2 தமிழ்க்காவியங்கள் பெரும்பாலும் வடமொழி மூலத்தைக்கொண்டவை. புதிய வடமொழி மூலங்கள் கிடைக்காமையும் காவிய ஒடுக்கத்துக்கு ஒருகாரணம்.

3 பிறமொழி இலக்கியப்பயிற்சி இன்மை. இவ்வாறு பயிற்சியுடைய சிலரும் பழைய நூல்களுக்கு உரை வகுப்பதில் காலம் கடத்தினர்.

4 ஸ்தல புராணங்களின் தோற்றம்.

5 சிறுபிரபந்தங்களின் தோற்றம்.

6 தத்துவநூல்களின் தோற்றம். இந் நூலாசிரியர்கள் காவிய உணர்ச்சியை எள்ளி நகையாடினர்.

7 அரசியல் குழப்பம். சோழப்பேரரசு கள் ஆட்சிபுரிந்தகாலத்தில் தமிழ்நாடு அமை தியாய் அனைத்துவகைச் செழிப்புமுற்று விளங்கியது. அதன்பின் பலஅரசபரம்பரை யினர் தோன்றி, அமைதி குறையலாயிற்று. அந்நிய மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட அரசபரம்பரையினர் தமிழுக்கு ஆதரவுதரவில்லை. இவர்கள் சிற்றரசர்களின் நிலையிலுள்ள வர்களானதாலும் தாம்செய் யும் காரியங்களுக்கு உத்தரவாதம் செய்ய வேண்டும் நிலையிலிருந்தபடியாலும் நாட்டில் அமைதிகுன்றியமையாலும் இலக்கியப் பெரு முயற்சிகட்குரிய சூழ்நிலை ஏற்படவில்லை. தமிழர்களும் தனியனிதப் புகழ்பாடுவதில் ஆர்வம்காட்டினர்.

இக்காரணங்களுள் இலக்கியச் சார்பான காரணங்கள்சில; அரசியல்சார்பானதுஒன்று. இவற்றுடன் மக்களின் மனப்பண்பும் ஒரு காரணம் என்பர்.

சங்ககாலத்திலும் காவியமுயற்சிஇல்லை; சோழருக்குப்பிற்பட்ட காலத்திலும் காவிய முயற்சி இல்லை. இவ்விரண்டுகாலங்களுக்கும் ஓர் ஒருமைப்பாடு இருக்கக்காணலாம். சங்க கால தமிழகம் பல்வேறு பகுதிகளாகி, பல் வேறு அரசர்களாலும் குறுநில மன்னர்களா லும்,ஆளப்படடதுபோல, சோழருக்குப் பிந் தியதமிழகமும்ஆளப்பட்டது.அடிக்கடிபோர் கள்; அவற்ருல் அமைதியின்மை. —இவை இரண்டுகாலத்துக்கும் பொருந்தும். சங்கப் புலவர்கள் தனிப்பட்ட மன்னர்களின் வீரத்

தையும் ஈரத்தையும் புகழ்ந்து பாடியதுபோல சோழர் பிற்காலப் புலவர்களும் பாடத் தொடங்கினர். அமைதியான சூழ்நிலையும் இல்லை; தனிமனிதவழிபாடும் வரவேற்கப் பட்டது. எனவே காவியமுயற்சி தடைப் பட்டது.

**கால ஆராய்ச்சி:**

தமிழ் இலக்கிய இலக்கண நூல்களின் காலத்தைப்பற்றியும், தமிழ்ப்புலவர்களின், உரையாசிரியர்களின் காலம் பற்றியும் ஆராய்ச்சிச்செறிவுமிக்க பலகட்டுரைகளைப் பேராசிரியர் எழுதியுள்ளார். அவற்றுள் தொல்காப்பியம், திருக்குறள். சிலப்பதிகாரம், முத்தொள்ளாயிரம், பதினெண்கீழ்க்கணக்கு, சங்க இலக்கியங்கள் ஆகியவற்றின் கால நிர்ணயமும், கம்பர் காலஆய்வும் குறிப்பிடத் தக்கன. அவரது கால ஆராய்ச்சிமுடிவுகளில் தொல்காப்பியர், திருவள்ளுவர், இளங்கோ குறித்தகால வரையறைக்கணிப்புகள் தமிழகத்தில் பெருங்கொந்தளிப்பை ஏற்படுத்தின. எனினும், தக்கவிதத்தில் எல்லோரும் ஒத்துக் கொள்ளும் வண்ணம் மறுப்புரைகள் வரவில்லை என்பதும் ஈண்டு குறிப்பிடப்பட வேண்டியதொன்றாகும்.

ஒருநூலின் அல்லது 'புலவரின் காலத்தைப்பற்றிய ஆராய்ச்சி செய்யப்புகும் போது, அந்நூலின் அல்லது புலவரின் காலத்துக்கு (1) முன்னெல்லை பின்னெல்லை வகுத்துக்கொள்வதும், (2) அவ்விருவெல்லைகளுக குட்பட்ட ஒருகாலத்தைப்படிப்படியாகப்பல சான்றுகளைக்கொண்டு நிறுவுவதும் பேராசிரியர் மேற்கொண்ட முறையாகும். இம்முறையைத்தான் விஞ்ஞானத் தன்மைகொண்டது என்கிறோம். முன்னெல்லை பின்னெல்லை வகுத்ததன் பின் உள்ள ஒருகாலகட்டத்தில், குறிப்பாக எந்தக்காலம் பொருத்தம், எதுபொருத்மில்லை என்பதைச்சில அகப்புறச்சான்றுகள் மூலம்தெளிவுபடுத்தி, தாம்கொள்ளும் முடிவை வலியுறுத்த இன்னும் சிலசான்றுகளையும் காட்டுவதில்தான் அவரது திறனும் விஞ்ஞானநோக்கும் வெளிப்படுகின்றன. சான்றாக, முத்தொள்ளாயிரத்தின் காலம்குறித்த அவரது ஆய்வுரையை எடுத்துக்காட்டலாம்.

முத்தொள்ளாயிரம் 2000 வருடங்களுக்குமுன் தோன்றியது என ஒருகருத்து நிலவியது. (டி.கே.சி. இக்கருத்தினர்.) அதை ஏற்றுக்கொள்ளாது, வேறுகாரணங்களால் இந்நூலை கி.பி. 9-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்துக்குக் கொண்டுவருகிறார். அவை:—

1. தொல்காப்பியச் செய்யுளியில் சூ. 239. உரையில் தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் முத்தொள்ளாயிரத்தை உதாரணம்காட்டுகிறார். பேராசிரியரின் காலம் கி.பி. 14-ஆம் நூற்றாண்டாகலாம். ஆகவே முத்தொள்ளாயிரம் இந்தக் காலத்க்கு முற்பட்டது.

2. இளம்பூரணரும் (கி.பி.12-ஆம்நூ.) தொல்காப்பியம் புறத்திணையியல் சூ. 5 உரையில் முத்தொள்ளாயிரத்தைக் குறிக்கிறார். எனவே இவர்காலமான கி.பி. 12-ஆம் நூ.க்கு முற்பட்டது இந்நூல்.

3. திவாகர நிகண்டில்சோழ, பாண்டியர்களுக்குரிய குதிரைகளின் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. முத்தொள்ளாயிரத்தில் வரும் சிலகுதிரைப் பெயர்கள் இவற்றோடு ஒத்துள்ளன. எனவே திவாகரத்தின் காலத்தைஒட்டி இந்நூல் தோன்றியிருக்கலாம். அதன்காலம் கி.பி. 12-ஆம் நூற்றாண்டு.

4. பேராசிரியர் 'விருந்து' என்பதற்கு உதாரணம் காட்டும்போது முத்தொள்ளாயிரம், கலம்பகம், அந்தாதி ஆகியவற்றைக் குறிப்பர். எனவே அந்தாதி, கலம்பகம் முதலிய பிரபந்தங்கள் தோன்றிய கி.பி. 8,9-ஆம் நூற்றாண்டை அடுத்து முத்தொள்ளாயிரம் புதியதாக இயற்றப்பட்டதாகவும்.

5. பேராசிரியர் முத்தொள்ளாயிரத்தைப் பிற்சான்றோர்செய்தனர் என்று (தொல் செய். 158.) குறிக்கிறார். பிற்சான்றோர் என்பது சங்கப்புலவர்களுக்குப் பிற்பட்டோரைக் குறிக்கும் சொல்லாட்சியாகும். அதனால் இந்நூல் சங்ககாலத்துக்குப் பிற்பட்டது.

பேராசிரியர், இளம்பூரணர் இவர்கட்கு முற்பட்டும், சங்ககாலத்துக்குப் பிற்பட்டும், அந்தாதி, கலம்பகம் காலத்தை ஒட்டியும் இந்நூல் தோன்றியிருக்கலாம் என விளக்கி, "எனவே கி.பி. 500க்குமேல் 850க்குள்ளாக இந்நூல் இயற்றப்பட்டதாதல் வேண்டும் என முன்னெல்லையையும் பின்னெல்லையையும் ஒருவாறு வரையறுக்கலாம்" என்று எழுதுகிறார். இந்நூல், இந்த 350 ஆண்டுகால எல்லைக்குள் எந்தப்பகுதியில் அடங்கும் என்பதற்குச்சில சான்றுகள் தருகிறார்.

1. முத்தொள்ளாயிரத்தில் சோழர் தலைநகராக உறையூர் குறிக்கப்பட்டுள்ளது. சோழரது தலைநகராகத் தஞ்சை சுமார் கி.பி. 850ல் தோன்றியது எனவே தஞ்சையைக் குறிக்காது, உறையூரைக்குறிக்கும் பாடல்களை உடைய இந்நூல் கி.பி. 850-க்கு முன் தோன்றியிருக்கலாம்.

2. பிற்காலவழக்கில் இடம்பெற்ற நாள், போது, பேர், வீணில், அல்லாமல், ஆனக்கால் ஆகியசொற்களும், 'ஏல்' போன்ற விகுதிகளும் இந்நூலில் காணப்படுகின்றன.

3. "பண்டன்று பட்டினங்காப்பு" என்ற முத்தொள்ளாயிரத்தொடர் பெரியாழ்வார் திருமொழியில் "நெய்க்குடத்தை" என்னும் பதிகத்தில்காணப்படுகிறது. யார்க்கிடுகோபூசல் இனி" என்பது நாச்சியார் திருமொழியில் "ஆர்க்கிடுகோ அவன்தார் செய்த பூசலையே" என வருவதோடு ஒத்துள்ளது. இவை பெரியாழ்வார் காலத்தை அடுத்துத் தோன்றியது முத்தொள்ளாயிரம் என்பதை உணர்த்துகின்றன.

4. பழமொழி நானூற்றில் காணப்படும் சிலபழமொழிகள் இதன்கண்ணும் காணப்படுகின்றன. ஆதலால் பழமொழி நூலின்காலத்திற்குப் பின்பு முத்தொள்ளாயிரம் தோன்றியிருக்கலாம். பழமொழியின் காலம் கி.பி. 750 ஆகும்.

மேற்காட்டிய அகப்புறச்சான்றுகள் மூலம் முத்தொள்ளாயிரம் கி.பி, 6-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தைச் சார்ந்ததாகலாம் என்ற முடிவுக்குவருகிறார்.

காலநிர்ணயிப்புச் சரியா, ஏற்றுக்கொள்ளக்கூடியது தானா, என்பது ஒருபுறமிருக்கட்டும். அக்கால நிர்ணயிப்பபைச் செய்யப் பேராசிரியர் கையாண்டமுறையின் விஞ்ஞானத்தன்மையைத்தான் நாம் இங்கே கருத வேண்டும். 2000 ஆண்டுகாலம் சரித்திரத்தை உடைய மொழியில், ஒருகுறிப்பிட்டநூல் எந்தக்காலத்தைச் சார்ந்ததாகலாம் என்று தெளிவற்ற முறையில் ஆராய்ச்சிசெய்து ஏதோ ஒருமுடிவுக்குவராமல், 200 ஆண்டுக்குள் இந்தநூலின்தோற்றம் எந்தக்காலப்பகுதிக்குள் இருக்கும், அக்காலப்பகுதியிலும் திட்டவட்டமாக எந்தப்பகுதியைச் சார்ந்திருக்கும் என்று வரையறை செய்வதுதான தெளிவான ஆய்வுமுறையாகும். அதைப் பேராசிரியர் மேற்கொண்டார் என்பதே அவரை நாம் நன்கு புரிந்துகொள்ள உதவும் சிறந்த சாதனமாகும்.

'நீலகேசி' யின் காலத்தைப் பற்றி பேராசிரியரும் சக்கரவர்த்தி நயினாரும் ஆய்வுரைஎழுதி உள்ளனர். சக்கரவர்த்தி நயினார்காட்டும் ஆதாரங்களைவிடப் பேராசிரியர்காட்டும் ஆதாரங்கள் வலுவுள்ளனவாக உள்ளமையை இருகட்டுரைகளையும் படித்தால் உணரலாம்.

சிலப்பதிகாரக் காலத்தைப்பற்றியும் பேராசிரியர் ஆய்ந்துள்ளதாக முன்பே குறிப்பிட்டுள்ளேன். சிலம்பின் கதை உண்மை

நிகழ்ச்சி இல்லை என்பதை 5 சான்றுகளால் தெளிவுபடுத்துகின்றார். நற்றிணை புறநானூறு, யாப்பருங்கலவிருத்தி மேற்கோள், மணிமேகலை, உரையாசிரியர்கள்—எனப் பல முறைகளிலும் சான்றுகள்தேடி தம் கருத்தை உறுதிப்படுத்தியவர், மேலும் 21 சான்றுகள் காட்டி, சிலம்பின் காலம் கி பி 800-ஐ ஒட்டியது என முடிவு எடுக்கிறார். இங்கு முன்னெல்லை பின்னெல்லை வகுத்து அதன்பின் ஒரு காலப்பகுதியை நிர்ணயம் செய்கிறார். அவர் தரும் 21 காரணங்களில் பழந்தமிழ்ச் சான்று 2; பிறமொழிச் சான்று 2; சரித்திரம்பூகோளச் சான்று 2; வானநூல் சான்று 1; யாப்புச் .சான்று 1; மொழிநூல் சான்று 4; சமூகநிலை, நூலமைப்பு சான்று 6; அகச் சான்றாக 17;-ம் புறச் சான்றாக 4-ம் உள்ளன. தமிழ் இலக்கியங்களில் சிறப்பிடம் பெறும் நூற்களின், புலவர்களின் காலங்கள் ஒருவாறு வரையறை செய்துகொண்டிருப்பதால் எந்த ஒரு நூலின் காலத்தையும் அவரால் நிர்ணயம் செய்வது எளிதாகிறது. தமிழ் இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றிருந்தமையாலும் அவற்றுக்குச் சொல்லடைவு (word index) பொருளடைவு (subject index) தயாரித்து வைத்திருந்தமையாலுமதான் இது அவருக்கு கைகூடிற்று எனலாம். அவருடைய ஆய்வுக் கட்டுரைகளைப் படிக்கும்போது அவரது புலமையையும் திறமையையும் எண்ணி நம்மால் வியக்காதுஇருக்க முடியவில்லை. முன்னெல்லை பின்னெல்லை வகுத்துக்கொள்வதுமட்டும் பெரிதில்லை, அந்தஎல்கைக்குள் ஒருகாலத்தை புறநிலையில் நின்று நிர்ணயம் செய்வதும், அதற்கான காரணங்களைத் தருவதும்தான் இமாலய வேலையாகும். அவ்வேலையைப் பேராசிரியர் திறமாகச் செய்துள்ளார் எனலாம். இன்றைய நிலையில்-ஆய்வுக்கான வசதிகளும் கருவிகளும் நிறைந்த நிலையில் அவரது முடிவுகள் பல மறுக்கப்படலாம் அதனை அவரது வழியில் சென்று, படிப்படியாக ஒவ்வொன்றையும் (அவர் செய்வதுபோல) மறுத்து ஒருமுடிவுக்கு நாம் வரவேண்டும், ஆராய்ச்சி என்பதே வளர்ச்சியின் அறிகுறி தான்.

**பாட பேத ஆராய்ச்சி:**

"இலக்கியதீபம்" என்ற நூலில் "எருமணம்" என்று ஒருகட்டுரை உள்ளது. குறுந்தொகை 113-ஆம் பாடல் காணப்படும் "எருமணம்" என்ற சொல்லின் பாடபேதத்தைப் பற்றியது அக்கட்டுரை. டாக்டர். உ. வே. சாமிநாதஐயர் அவர்கள் தம் குறுந்தொகைப் பதிப்பில் "எருமண்" என்பதைப் பாடமாகக் கொண்டு, "எடுமணத்தைப் பேதமாகக் காட்டியுள்ளார்கள். பேராசிரியர் அவர்கள் திவாகரம், மொழிநூல், தமிழர் பழக்கம் ஆகிய மூன்று சான்றுகளால் "எருமணம்" என்பதே மூலபாடமாகவேண்டும் என்று கூறியுள்ளார். அவரது கூற்றை அப்பாட்டில் உறுதிசெய்யக் காணலாம். அக்கட்டுரையின் அமைப்புச் சிறப்புறக் குறிக்கத்தக்கதொன்றாகும். குறுந்தொகையைப்பற்றியும், அதன் உரைகள், பதிப்புக்கள்பற்றியும் முன்னுரையில் கூறப்பட்டு, பிறகு தான் எடுத்த பொருளுக்கு வருகிறார். பாடபேத ஆய்வுக் கட்டுரைகள் எப்படி அமையவேண்டும் என்பதற்கு அதனை முன்மாதிரியாகக்கொள்ளலாம். குறுந்தொகை 75-ஆம் பாடலில் ஒரு பாடபேதம் உள்ளது. 'பாடலி' என்பதை 'பாடிலி' என்று ஓர் ஆசிரியர் பதிப்பித்துள்ளார் அதைத் தவறு என்றும், 'பாடலி' என்பதே உண்மையானபாடம் என்றும், அப்பாடம் உணர்த்தும் ஒரு வரலாற்றுக்குறிப்பையும், அதன் மூலம் குறுந்தொகைப்பாடல்களின் காலம் எதுவாக இருக்கலாம் என்றும், ஒருகட்டுரையில் 13 விளக்குகிறார். "யாரினும் இனியன் பேரன்பினனே" என்ற குறு 85-ஆம் பாடலடியை ஒருபதிப்பாசிரியர் "யாரினும் இனியன் போனபின்னே" என்று பதிப்பித்துள்ளதை எடுத்துக்காட்டிச் சரியான பாடத்தையும் காட்டுகிறார். பேராசிரியர் பல ஏடுகளையும் பதிப்புகளையும் தாமே அரிதின் முயன்று தேடிச் சேகரித்து பிரதிசெய்து ஒப்புநோக்கி

ஆராய்ந்ததன் விளைவாகவே இம்முடிவுகள் நமக்கு கிடைக்கலாயின.

## தமிழர் ஒழுகலாறு:

'இலக்கியவிளக்கம்' என்ற நூலில் 'தைந் நீராடல்' என ஒருகட்டுரை உள்ளது. அக் கட்டுரையில் பண்டைத்தமிழர் தம் ஒழுக்க மான தைந்நீராட்டைப்பற்றிக் கூறி, அதற் கும் இடைக்காலத் தமிழர்தம் ஒழுக்கமான 'மார்கழிநீராட்டு-நோன்பு'க்கும் உள்ள உற வையும் வெளிப்படுத்துகிறார். பேராசிரியர் கருத்துப்படி தைந்நீராடலும் மார்கழி நீராட்டும் வேறுவேறானவை. பின்னதில் சமயச்சாயம் உண்டு; முன்னதில் அதுஇல்லை என்று பல சான்றுகள்காட்டி நிறுவுகிறார். கலித்தொகை, பரிபாடல் தவிர ஏனைய சங்கப்பாடல்களில் தைந்நீராட்டத்தைப் பற்றி வந்துள்ள செய்திகளைத் தொகுத் துரைத்துவிட்டு, இவ்வாறு எழுதுகிறார்:- "இங்கே கூறியவற்றால் கன்னியர் விளையாட் டின்பத்தின் பொருட்டும் தமது காதலனைக் கணவனாகப் பெறுதற்பொருட்டும் தைந்நீரா டல் புரிவரென்பதும், இளஞ்சிறுமியர் இம் மாதத்தில் விளையாட்டின்பம்பொருட்டாக மாத்திரம் வண்டற்பாவை இயற்றிக் குரவை அயர்வரென்பதும் நன்கு விளங்கும். இவை சுமார் ஈராயிரம் ஆண்டுகட்குமுன் தமிழ் மக்கள் வழக்கமாய்க்கொண்ட ஒழுக்கமாகும். சுமார் ஏழு நூற்றாண்டுகள் சென்றபின்னர் இவ்வொழுக்கத்தில் முக்கியமான வேறுபாடு கள் தோன்றின." 14 மேலும், "நாம் முக்கிய மாகக் கவனிக்கவேண்டியவை இது சமயச் சார்பாக மாறிவிட்டது என்பதும், திருவா திரையன்று இந்நீராட்டு நோன்பு தொடங்கு மென்பதுமேயாம். அம்பா ஆடல் என்ற பெயரும் இதற்கு ஏற்பட்டது. இச்சமயச் சார்பும் திருவாதிரையன்று தொடக்கமும் முற்சங்க நூற்களிற் காணுதன. கலித் தொகையும் "தைந்நீராடியதவந்தலைப்படு வாயோ" என்று கூறுதலால் இதுவும் சமயச் சார்பை உணர்த்துகிறது என்றே கொள் ளுதற்குரியது. இக்காரணத்தால் இவை யிரண்டு நூல்களும் (கலித்தொகை, பரி பாடல்) முற்சங்க காலத்திற்குப் பிற்பட் டெழுந்த 14a சமயக்கிளர்ச்சிக்குப் பின் தோன்றினவாதல் அறியப்படும்" என்று குறிப்பார். தைநீராட்டின் மாற்றத்தை மட்டுமல்லாது கலித்தொகை, பரிபாடல் இவற்றின் காலநிர்ணயிப்புக்கு அது உதவுவ தையும் எடுத்துக்காட்டுகிறார். சமுதாய பாதிப்புகளுக்கு காரணமான சமயக்கிளர்ச்சி இலக்கியத்திலும் இடம்பெற்றமையை இங்கே சுட்டிக்காட்டுகிறார். அதன்பின், இங்குக்கூறியவற்றால் மார்கழிநீராட்டு வேறு தைந்நீராட்டு வேறு என்று எளிதில் துணி யலாம்" என்று உறுதிசெய்கிறார். மு. இராக வையங்கார்'தைந்நீராட்டேமார்கழிநோன்பு எனக் கருதுவார். இதை அவரது கட்டுரை 15 நோக்கித்தெளிக. இவ்விரு கட்டுரைகளை யும் ஒப்பிட்டுப் பார்க்கும்போதுதான் இரண் டின் வன்மை மென்மைகள் தெற்றெனப் புலப்படும்.

தமிழர்தம் திருமணம்பற்றிய கட்டுரை ஒன்றில்16 ஆசிரியர் தமிழக் கூட்டுறவால் திரு மணச் சடங்குகளில் ஏற்பட்ட மாற்றங் களைத் தெளிவுறுத்துகிறார். "இவற்றையெல் லாம் நோக்குமிடத்து ஆதியில் ஆரியர் கலப்பு மிகுதியாக இல்லாதகாலத்தில் மணச் சடங்கு ஒருசிலவே இருந்தமையும் பின்னர் அவர்களுடைய கூட்டுறவு தமிழ்நாட்டில் பெருகப்பெருக மணச்சடங்குகளும் பெருகி விட்டமையும் நன்கு புலப்படும்."17 தொல் காப்பியம் அகநானூறு, சிலப்பதிகாரம், பெருங்கதை, நாச்சியார், திருமொழி, கம்ப ராமாயணம் ஆகிய நூல்களில் கிடைக்கும் சான்றுகளைக் கொண்டு இக்கட்டுரை எழுதப் பெற்றுள்ளது. வரலாற்று ரீதியான ஒரு கட்டுரை இது. 'பண்டைத்தமிழ வாழ்க்கை, பற்றிய ஒரு கட்டுரை இங்கு வாழ்க்கையில் நினைவுகூறத்தக்க ஒன்ற இக்கட்டுரை ஒரு குறுப்பிட்ட கால யில் (synchronic) தமிழர் வாழ்ந்த 1957. முறைபற்றிக் கூறுகிறது.

நூற்பதிப்பு:

பேராசிரியர் ஏறத்தாழ 40 நூற்கள் பதிப்பித்துள்ளார். அவற்றுள் இலக்கணம், நிகண்டு, காவியம்; சிற்றிலக்கியம், நீதிநூல்கள், நாடகம் எனப் பல துறைகளைச் சார்ந்த நூல்கள் உண்டு. பல நூல்களைப் பதிப்பித்த காரணத்தால், நூற்பதிப்புக் குறித்துத் தெளிவான கருத்தையும் குறையையும் கொண்டிருந்தார் என்று சொல்லலாம். ஆராய்ச்சி உணர்வோடும் அறிவியல் முறையோடும் நூல்கள் பதிப்பிக்கப்படவேண்டும் என்பதில் அவர் தீவிரமான கருத்துடையவர். இதற்கு எடுத்துக்காட்டாக, ஷேக்ஸ்பியரின் நாடகப் பதிப்புக்களை எடுத்துக் காட்டுபவர். ''ஷேக்ஸ்பியரை முதன்முதலாக விஞ்ஞான நோக்கோடு பதிப்பித்தவர் எட்வர்டு கேப்பெஸ் என்பவராவர். இவர் மூலப் பிரதிகளை ஒப்புநோக்கி அவற்றினின்றும் தக்க பாடல்களைத் துணிந்து வெளியிட்டுள்ளார். இதுவே நேரிய முறையென்று யாவராலும் ஒப்புக்கொள்ளப் படுகிறது.''[19] கம்பராமாயணப் பதிப்புக்கான முயற்சிகள், முறைகள் குறித்த பேராசிரியரின் கருத்துக்கள், அவர் மேற்கொள்ள விரும்பிய பதிப்புமுறையை விளக்க உதவுவன,

''முதலாவது நாம் செய்யவேண்டுவது அச்சுப்பதிப்புக்கள் அனைத்தையும் ஏட்டுப்பிரதிகளிற்கிடைக்கக் கூடியனவற்றையும் ஒருங்கு தொகுத்தாலும்.......... பிரதேச வாரியாகச் சேர்க்கும் ஏடுகளில் காலத்தால் மிகவும் பழமையானவை நமக்குப் பெரிதும் பயன் தருவன ஆகலாம்.''[20]

''இந்த ஏடுகளைப் பொருத்தமான நியதிகளைக் கையாண்டு வகைப்படுத்தி வைத்தல் வேண்டும்..............ஏட்டுப்பாடங்கள் பரிசோதிக்கப்படுதல் வேண்டும்.......................செய்யுளோசை பொருள் முதலியவற்றைக் கவனித்தல் வேண்டும்.........பாடபோதங்களை எல்லாம் குறித்துத்தொகுத்தல் அவசியமாகும். முடிவுபாடபேதங்களும் இன்னின்ன பிரதிகளிலுள்ளன என்று பிரதிகளின் பெயர்களும் ஒவ்வொன்றுக்கப்படுதல் வேண்டும்.''[21]

''பாடபேதங்கள் அனைத்தையும், இடைச் செருகல்கள் அனைத்தையும் நாம் ஆராய்ச்சிப் பதிப்பில் கொடுத்துவிடுவது அவசியமாகும். நாம் மேற்கொள்ளவேண்டும் பாடங்கள் எவை என்பதைதிட்டமாக வரையறுத்துணர்தல்வேண்டும். பிற பாடங்களையும் அவை பற்றிய விவரங்களையும் ஆராச்சிகளையும் ஆராய்ச்சிக் குறிப்பு என்ற தனிப்பகுதியில் சேர்த்து விடுதல்வேண்டும்......எனவே நூற்பகுதி ஒன்று, ஆராய்ச்கிக்குறிப்புப் பகுதிஒன்று என இரண்டு பகுதிகள் இப்பதிப்பில் அமைக்கலாம்.''[22]

''உண்மையான மூலபாடத்தை நூற்பகுதியில் அமைத்தலோடு இப்பகுதியிலுள்ள செய்யுட்களை ஓசைகொடாதபடி சந்திபிரித்தலும், பொருள் விளக்கத்திற்கு வேண்டும் குறியீடுகளை அமைத்தலும் இப்பதிப்பில் நாம் கையாள வேண்டும் முறைகளுள் சிலவாகும்... மிக இன்றியமையாததான குறிப்புரையும் அடிக்குறிப்பாக சேர்த்தல் நலமாம்........... ஆராய்ச்சிக் குறிப்புப் பகுதிக்குப் பின்பு, அனுபந்தப் பகுதிஒன்றும் அமைதல் வேண்டும். அதல் அபிதான விளக்கம், செய்யுள் முதல் குறிப்புமுதலிய அகராதிகள் இடம்பெற வேண்டும்....இப்பதிப்பிற்குப் பூர்வாங்கமாக ஒரு விரிவானமுன்னுரைஅமைக்கவேண்டுவது மிகமிக இன்றியமையாததாம். அதில் இப்பதிப்பிற்கு உதவிய ஏட்டுப்பிரதிகளின் விவரங்கள், ஏடடுப்பிரதிகளின் இனப்பாகுபாடுகள் ஏட்டுப்பிரதிகருள் வகைகளில் ஒன்றுற்கொன்றுள்ள தொடர்பு, முற்பதிப்புக்களின் விவரங்கள், மூலபாடத்தைக் கண்டுகொள்ளுதற்குக் கையாண்டமுறைகள், கதை வேறுபாடுகளின் விவரங்கள் வரலாறுகள், மிகைக்செய்யுட்கள் சில பிரதிகள், காணு தொழிந்த செய்ட்கள், பாடபேத ஆராய்ச்சியிலுள்ள இடையூறுகள் முதலிய பொருள்கள் பற்றி விவரித்து ஆராய்ந்தெழுதப் படுதல் வேண்டும்.''[23]

கம்பராமாயாணப் பதிப்புக்கு மட்டுமல்ல இவை எந்த ஒரு நூற்பதிப்புச்கும் ஏற்ற முறைகளாகும். இவற்றுள் எல்லாவற்றையும் மேற்கொள்ளவில்லை என்றாலும் பலவற்

மறுத்து ஒரு

தையாவது மேற்கொண்டு பேராசிரியரின் சங்க இலக்கியம், நிகண்டுகள், சிறுபஞ்சமூலம் திரிகடுகம் பதிப்புக்களும் டாக்டர். உ. வே. சா. வின் சங்கநூற்பதிப்புக்களும் செ. முருகப் பாவின் கம்பராமாயணம் பாலகாண்டப் பதிப்பும், மர்ரேகம்பெனியின் பதிப்புக்களும் வெளிவந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பலநூற்களுக்குப் ஆராய்ச்சிப் பதிப்புகள் வெளிவரவேண்டியதன் அவசியத்தையும் அவற்றின் அமைப்பு எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதையும் மேலே காட்டியுள்ள வரிகள் தெளிவுறுத்தும். கம்பராமாயணத்தைப் பொறுத்தமட்டில் 'மூலநிர்ணயப் பதிப்பு, சுத்தப்பதிப்பு, சுருக்கப்பதிப்பு, உரையிடையிட்ட சுருக்கப்பதிப்பு, தெரிவுப் பதிப்பு, தெரிவுதிருத்தப்பதிப்பு, எனப் பல வகைப் பதிப்புக்களை நிரல்படுத்திக் காட்டுகிறார்.

பேராசிரியரின் தமிழ்ப் பேரகராதிப் பதிப்பும் (தமிழ் லெக்ஸிகன்) பாராட்டற்குரிய ஒன்றாகும். இதனைப்பற்றிய விவரத்தைப் பிறிதொரு கட்டுரையில்[24] குறிப்பிட்டுள்ளேன். மேலும் விளக்கம் வேண்டுவோர் பேராசிரியரின் 'அகராதி நினைவுகள்' என்ற நூலைப்பார்க்கவும்.

இலக்கிய ஆராய்ச்சி, ஆராய்ச்சிப் பதிப்புக்களோடு அமையாது. தமிழக வாலாற்றின் முக்கியமான சில காலகட்டங்கள் குறித்தும் (மௌரிய தென்னிந்தியர் படையெடுப்பு, பாலையின் அரங்கேற்று மண்டபம்)[25], சில தமிழ்ச் சொற்கள் காலப்போக்கில் அடைந்த உருமாற்றம் - பொருள்மாற்றம் குறித்தும்[26] சிறந்த ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார். சொல்லாராய்ச்சிக் கட்டுரைகளில் பலவற்றின் முடிவுகள் இன்று மறுப்புக்குரியன என்றாலும், அக்கட்டுரைகளின் அமைப்பும் முறையும் செவ்வனே உள்ளன. உள்ளன. இவற்றோடு, கம்பனின் கதாபாத்திரங்கள்குறித்தும் பாரதி, கவிமணி ஆகியோரின் கவித்திறன் பற்றியும் இலக்கியத்திறனாய்வுக் கட்டுரைகளும்[27] எழுதியுள்ளார், ஆயினும், பேராசிரியருக்குத் தமிழிலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுத்தந்தவை அவரது இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளும், அவற்றுள் அவர் கையாண்ட அறிவியல் முறைகளுமே[28] யாகும் என்பது வெள்ளிடைமலை.

## அடிக்குறிப்புக்கள்

1 'தாமரை' (மாத இதழ்). மார்ச்சு. 1969
2 'கம்பன்காவியம்', பக். 83.
3 ஷை பக். 151.
4 'காவியகாலம்' பக். 137.
5 ஷை பக். 28
6 ஷை பக். 17—18; 34:313.
7 ஷை பக். 22.
8 "பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை" பக். 95.
9 காவிய காலம், பக். 314—15.
10 ஷை பக் 316–319.
11 "இலக்கிய தீபம்" பக். 185.
12 "காவியகாலம்" பக். 206—209.
13 "இலக்கியதீபம்" பக்.107.
14 "இலக்கிய விளக்கம்" பக் 89.
14a ஷை பக். 89.
15 ஆராய்ச்சித்தொகுதி; மு. ராகவையங்கார்.
16 காவிய காலம், பக் 325—331.
17 ஷை பக். 331.
18 'தமிழர் பண்பாடு' பக். 37—55.
19 'கம்பன் காவியம்' பக். 100.
20 ஷை பக். 74.
21 ஷை பக். 75.
22 ஷை பக். 75—76.
23 ஷை பக். 77—78.
24 "தாமரை" மார்ச்சு 1969.
25 இலக்கியதீபம்.
26 சொற்களின் சரிதம்.
27 தமிழர் பண்பாடு, தமிழ்ச்சுடர்மணிகள்.
28 பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை. பக். 120-125

## இக்கட்டுரை எழுதத் துணைசெய்த நூல்கள்


1 எஸ். வையாபுரிப்பிள்ளை: இலக்கியதீபம், மூன்றாம் பதிப்பு, 1964.
2 ஷை காவியகாலம், முதற்பதிப்பு, 1954.
3 ஷை கம்பன்காவியம், மூன்றாம்பதிப்பு, 1962.
4 ஷை இலக்கியவிளக்கம், முதற்பதிப்பு, 1958.
5 ஷை தமிழர் பண்பாடு, ஆறாம்பதிப்பு, 1963.
6 ஷை தமிழ்ச்சுடர்மணிகள், மூன்றாம்பதிப்பு, 1659.
7 வை. சரோஜினி பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, முதற்பதிப்பு, 1957.
8 எஸ். வையாபுரிப்பிள்ளை சொற்களின் சரிதம்.

# EPIC POETRY AND THE MODERN MIND.

By **A. V. Subramania Aiyar**

*[We in Tamilnadu have a rich heritage of Epic poetry, a product first of Jain poets and then of Vaishnava & Saiva poets. This crop of epics arose at a period when ancient tribal societies coalesced into kingdoms. This was mainly done by tribal wars in which, the fittest survived.Thus arose kingdoms,and kings. Heroes of a new type differing from the tribal hero who was always a part and parcel of the tribe. This new type of hero was the warrior, war leader and emperor. Jeevakan and Uthayanan were manifestiations of such concepts. The accendency of a few heroes over the society as a whole leads to domination over it by a few masters. That era is dying out. The new motto of the future world is "One for all and all for one".*

*Ideas of socialism are spreading throughout the world. The domination of a few individuals over the entire society is now being resented and a new ideological fervour is sweeping the old weary world. In this new context, it may not be possible even for literary giants to produce epics any more. But the epics that arose in the past will be enjoyed as interesting traditions of the past. — Editor]*

It is generally thought that the epic is an outmoded from of literary art, incapable of appealing to or inspiring the modern mind any longer. This view deserves careful examination. For this purpose it is neccessary to trace the factors that shape the make-up of what is called the modern mind and then find out why it has no taste for epic poetry.

It is true that most educated people of to-day in all countries do not have

the inclination, patience and the equipment to read the massive epics of the past. The reasons for this state of affairs are not far to seek. The changed outlook in education that is imparted to the children and boys and girls is mainly responsible for the impatience and inability of the modern youth for any substantial or sustained intellectual effort, involved in reading and enjoying of epic poetry. Of late, in most countries the importance of the study of classical literature, history and philosophy has been steadily ignored. The value of the study of the humanities, for a sound and balanced mental training has not been adequately realised. Emphasis in education has been greatly laid on the practical, vocational and the scientific training, which, of course, is essential. Free and compulsory elementary and seconary education has been considered a national neccessity in most advanced countries. The nationwide diffusion of education, and the universal literacy it has brought about, have resulted in the general lowering of standards in literary and humanistic study, and adeversely affected the growth of art and literature of quality. The need to provide intellectural and mental pabulam to the millions of literate persons has generally shaped and given direction to, all creative literary effort; and this of the community need is gradually changing the standards by forming the public taste in arts, letters and culture.

Such a development as this is not by itself undesirable but for two consequences. The one is the supreme self-consciousness of the democratic modern mind, which has begun to consider that only what it likes and understands and what staisfies it are the best in art or literature. There is no danger if it stops with this attitude. It goes one step further and decries what critical judgement of its betters has considered superior and worthy: it asserts that it has no use for such superior and worthy. This is probably an inevitable and insidious repercussion of the political democracy in the world of letters. This tendency, unless curbed in time, will be fatal to the development of the truly great in art and literature. It is the duty of the modern critic to face this situation boldy. Dr. I.A. Richards draws attention to this aspect of the matter in the following words:- "With the increase of population the problems presented by the gulf between what is preferred by the majority and what is accepted as excellent by the most qualified opinion has become infinitely more serious and appears likely to become threatening in the near future. For many reasons standards are much more in need of defence than they used to be. It is perhaps premature to envisage a collapse of values, a transvaluation by which popular taste replaces trained discrmination. Yet, commerialism has done stranger things : we have not yet fathomed the more sinister potenialities of the cinema and the loudspeaker and there is some evidence, uncertain and slight no doubt, that such things as 'best-sellers, (Compare Tarzan with She), magazine verses, mantalpiece pottery, Academy pictures, Music Hall songs,

county Council buildings, war Memorials are decreasing in merit".

The second is a tendency among a section of modern scholars themselves to underrate, if not to ridicule, great literature of the immediate past and of the ancients, on flimsy grounds that can not stand scrunity. The high seriousness of purpose of literature and the accepted moral values have been held up to contempt. The author of the concise Cambridge History of Literature has some remarke to offer on this development. He observes: "The least happy tendency of recent criticism is the tendency to praise the little at the expense of the great. Eminence, especially moral eminence has become the target of the wits. But to repudiate moral excellence is to repudiate life itself. Whatever our form of belief or disbelief, we cannot evade the duty of man, his duty towards God and his duty towards his neighbour, that is, the need for aspiration above the self and the noed for expansion beyond the self. Liteature as an art, need not make the inculcation of this duty, its prime business: but literature that seeks to bring this duty into contempt has gone over to the enemy of life and art. It has joined the mob to whom art is folly, it has joined the cheap-jacks and charlatons, to whom art is deception. All literature is not conerned with the noblest ideas and ideals but we should be very jealous for the honour of the great works of literary art that have so concerned themselves. Our artistic and moral values, our criticism must not go off the gold standard". [2] In our own country the tendency that has been criticised above has just begun to raise its head.

There has recently arisen a school of thought that has laid the greatest stress on the social value of literature. They have held that literature and art have value, only to the extent to which they are instruments of social welfare and development. Extending the political conception of the largest good of the largest number, they have laid down that literature and art, to be truly great and valuable, should be of use to and enjoyed by, the largest number of people. They also consider that such literature should have a grand moral aim of uniting people in common sympathy and devotion to common ideals. One of the most famous exponents of this school is Tolstoy, the great Russian writer and thinker, whose massive and sublime literary creations in the field of novel and story were not however motivated by his later theories of art. At no time before and by no one was great art or poetry conceived of as having, no relation to life, or no social use. It has been a fact that the great epic poems of antiquity were born primarily to serve social ends; epic literature was both the result and the cause of an active and conscious community life. The later artists and poets also did not ignore this aim. They held that poetry should both instruct and delight. This estabilished a connection between poetry and life. When Mathew Arnold said that poetry was a criticism of life, he stated a broad truth and emphasised one essential as-

pect of poetry. For this, he was unjustly attaked by certain critics who thought that he had misconceived the aim, and circumscribed the bounds, of poetry. If the function of poetry is to instruct and delight, it was asked, then, should it not be of such a nature as to instruct and delight the largest number of people. This is the logic of this school.

The fault of Tolstoy lay, however, in his rather excessive emphasis on this, to the exclution of every other, aspect. From this, it was but one step to arrive at the theory of a certain modern school that art and literature must reflect reality as it is, as only then will it be of the greatest use to the largest number of people. These theorists rule out a purely artistic and imaginative presentation of reality, objectivity; and especially the grimmer side of it is their prime concern. To them the most staring reality is the struggle from a class society to a classless society and therefore no literature that does not treat of this is real. They further hold that in countries where there is no such struggle at present, literature must deal objectively, though artistically, with the sufferings of the people in such a way as to incite them to revolt and improve their lot. They have criticised all the great literature of the recent past as being aimed to buttress the **bourgeoise** idea of society and based on the conception of art or poetry being the product of only a "dream factory" in the words of Ilya Ehrenburg. One writer of this school, Howard Fast states that "there is no subjective art" and that "there is no other method than realism, whereby art may be created." He adds that the Socialist realism is the true realism of to-day: and while abmitting the importance of ethics and morality to art and literature, points out that the only true moraiity is that which is based on the needs of the people for progress, in a given context of history.

The stand of this school against the self-centredness and extravagances of the poets of the Romantic movement is understandable though its rejection of iheir great poetry, cannot be supported. Its disapproval of most writers of this century on the ground that they have not dealt with the problems and struggles of the people is equally understandable. Its protest against excessive and the somewhat mystic importance given to form in poetry and to merely verbal charm and beauty without adequate content is jutified. Further it is not correct to say that life and realism have not been the subject of literature in the past. Many poets and writers have reflected life in their works while a few others have even attempted to draw a picture of their conception of ideal society, The plays of Euripides and Plato's Republic in the anicient Greek literature and the novels of Fielding and Dickens and More's Uptopia in modern English literature can be cited as examples. A great poet like Shakespere has dealt in his plays with the manysided problems of life and probed into the intricacies of human nature. An element of realism is found in the works of all great writers. Elizabeth Barrett Browning has said clearly.

"I do distrust the poet who discerns
No character or glory in his times,
And trundles back his soul five
hundred years,"

"Nay, if there is room for poets in
this world
A little overgrown (I think there is)
Their sole work is to represent
the age,
Their age, not Charlemagne's, — —
this live throbbing age." 3

She has also declared that 'Art is Service' and in this is the forerunner of later theorists who want realism to be the basis of all art or poetry.

What is the realism of to-day which modern literature has to reflect and embody?. And what sort of literature will it be? The bulk of Asia, Africa and South America and the Middle East is so backward that their people have not been able to grow fully into the type of 'modern mind'. Two developments have given the tone and the direction to the belief-attitudes and the patterns of thought and social behaviour to the modern mind in the western world. The one is the remarkably rapid development of Science and the pervasive way in which it has been harnessed to Industry, the offensive and defensive warfare and the satisfaction of the civil needs of the community. This has created several complicated and thorny social problems which remain unsolved.

The second is the excessive obsession of the people with the idea of the sovereignty of the Nation-state, which has become a new religion, though it would not be admitted as such. For instance, both America and Russia the super states which are at the head of two opposing ideologies regarding the internal organisation of their societies, and are conscious of their military might, are united in their worship of this new God, the Nation-state, which has displaced among the modern nations, the gods of their Religion, in every day worship. This new God is extorting from the modern nations sacrifices and sufferings, which no God of religion ever dreamt of taking even in the days, when the darkest superstitions ruled over the mass mind. The Nation-state has been proclaimed to be a law unto itself, beyond the code of the moral values developed for individual social behaviour; the only limiting factor is the power of the other Nation-states to coerce it. Force is accepted, as it always has been, as the arbiter in disputes between Nation-states, though lip service is being done to the cause of peace and the authority of an international organisation like the United Nations after the demon-god of Nation-state called for two world wars in this century and caused immense loss of the lives of the young and the adult and property and untold suffering. It is the youth of the counuries, that suffered most. Before they could finish their education and before their character and mental habits could be formed to give maturity to their minds they were called for war, which incurably brutalised and debased the nature of such of those as had the good luck

to return. And a third world war cannot be entirely ruled out notwithstanding the United Nations, Those who are actually preparing for it regale the world with repeated declarations that it is not invitable and may not happen. Such is the regard for truth among the rulers of the modern world. A major portion of the resources of an ever bountiful Nature, the secrets of science and the skilled labour of mankind, which ought to be need to meeting the essential needs of Man like food, clothing, shelter and other amenities is devoted to war effort by a few countries, while four-fifths of the world's population continues to be backward and in dire want. The feverish activity, that is going on among the advanced countries savours ef nothing but a devil dance at the altar of the demon-god of the Nation-state, by people drunk with the power of wealth and Science. The ideas of one world and world Government are too feeble to be heard. It has not struck the bigger powers of to-day that morally, the world should be one unit, egalitarian in set-up, with all the people having a claim to the resources of the world.

Under the strees of conditions arising out of control over Nature and of the application of Science to make weapons of destruction for war, the modern mind has unconsciously thrown overboard all the essential cultural and moral values of even the Western civilisation and is not ashamed to remain in a state of naked brutality. Introspection has led to a sense of guilt and this in its turn has led to restlessness and tension. The most unfortunate feature of it, so far as it has been reflected in recent history and literature and poetry is that it drifts aimlessly without knowing itself in spite of its breadth and strength, gained by a consciousness of the growing mastery over Nature and its grim power. A hundred years ago Mathew Arnold wrote :— "Sanity-that is the great virtue of ancient literature: the want of it is the grert defect in the modern, in spite of all its variety and power". This remains as true to-day, when we take into account the literature that has been acclaimed by the modern mind. It is also taking in balance, a quality as important as sanity. The modern mind, so far as it has been said to be formed to-day, is a curious mixture of want of faith in or reverence for anything, sex-centredness, blind adoration of wealth and power, insatiable desire to increase material comfort, callousness to human suffering and of supreme self-importance, all cemented together by a pervasive selfishness. It has invented certain slogans and jargons and deluded itself into thinking that it is really noble and progressive. As a matter of fact, the average modern mind has been in a state of neurosis, in a more or less degree, at least from the time of the first world war.

The malady is easy to diagnose: it is easy to cure also, but for the fact that the political, social and moral philosophers of the west are talking in a Babel of voices. The biologist, psychologist and the moral philosopher have attacked, each from his own angle, the pro-

blems arising from the unlimited power of Science and its inevitable misuse, and given conflicting views about the present world situation and the remedies it calls for. But they have not had the courage to cry halt to the use of Science and human creative and inventive power to plan deadly weapons of mass destruction at great cost. Nor have they called upon Man to give up helplessness and rise in intelectual and moral stature to control his own power. Unless they recognise certain fundamentals, all the problems arising out of the disturbance of the modern mind cannot be easily solved. The recognition of the essentially spiritual nature of Man is the first need. It must be remembered that, whatever the psychologists and Scientists may say, Man has the power of will to discipline his emotions and shape his conduct; his nature is s compound of creative and destructive impulses; and by training and environment, the creative impulses may be developed and controlled and the destructive impulses wiped out. The basic moral principles of truth, goodness, nobility, justice, charity, fairness and self-abnegation, which are inherent in him and not related to values, never change.' They are the elements of character, which have made Man what he is down the ages irrespective of his material surroundings. Their application to the social conditions of each age may vary: change and adaptability to new circumstances and to new knowledge are neccessary: but the values of the qualities themselves remain because they are rooted deep in human nature and experience of ages. Therefore any attempt tor reform the world, relieve iis tension and to bring about noamality and peace, to be successful, ought to proceed on this basis. What is now ought to be done under the aegis of Science is something different. Man's possessfon of power grained by his mastery over Science, is deemed to be a new circumstance to justify his lgnoring the basic human and moral values. The new approach, if it can be called one, ignores the simplicity and good nature of Man; it regards all moral values as empirical and unsuitable to the new age; and it considers that a repudiation of all the moral and human values, does by itself constitute the basis of new morality. The positive concent of it is yet to be. Lin Yutang who had exceptional opportunities to study the modern mind of tne West at close quarters writes :— "The plain fact is that we are scared not only of moral judgments, but of all normal emotions. Our morality is getting a little synthetic and is served up to the public in dehydrated essences ...................... The machine has been substituted for the man, and one could feel from the use of these machanical terms, that the human mind itself is being changed and that a kind of Scientific formalin is taking the place of human blood in our blood vessels."[4]

While Religion and institutional conservatism and humanistic morality have been fighting a rear-guard action against these disintegrating tendencies

of the modern mind, Science and philosophy have been furthering this process in a general way. John Dewey, the famous American philosopher, for instance, thinks that there is no use in blaming Science for the present chaos of the world or condemning human nature wholesale. He considers that old customs, values and institutions of a prescientific age have ceased to be compatible with new conditions, that have now arisen out of recent Scientific development and pleads that Science and its method of experiment and enquiry should itself be used to create a new theory of morals. He adds "The impact of systematic precption of this cleavage of directions upon philosphy is disclosure that what is called "modern" is as yet unformed, inchoate. Its confused strife and its unstable uncertainties refiect the mixture of an old and new, that are incompatible. The genuinely modern has still to be brought into existence."[5] It must be stated that Science as such is not blamed but Man is for using its destructive power over brother man, who is week and not equally armed. In the view of Dewey the genuinely modern must be completed free from the old. for the new is radically different and unavoidable. It is not shown why it should be so far has it been shown why any new theory of morals, evolved from Scientific enquiry and development, however radical it may be, should give us the fundamental moral traits which Man has prized ever since he passed out of his primitive stage.

The discussion in the preceding paragraphs is intended to give a brief idea of the modern world and the make-up of the modern mind for the purpose of raising and answering two questions. The one is whether the epics of the past will continue to be sdmired and read. The other is whether the atmosphere to-day is such as io be congenial to the continuance of epic tradiion in literature and the creation of new epic poems.

There is no diffiaulty in answering the first question. Those who value art and literature-and there are many in every country-will not easily forgo the pleasure of reading the epics. Whatever the shape of the future intellectual and cultural set-up of the world may be, national epic poems will remain imperishable, for Man can not succeed in cutting himself away from the past and thus sterilise his memory. His life then will be poor and unberable.

The modern mind my use the epic in any way it may choose, but it cannot discard it altogether, inspite of the current popular distaste for the epic or other serious forms of literature, due to faulty education and other causes. The greatness of an epic or its capaciiy for survival does not depend on the taste of ageneration or even of an age. 'Popular' is notoriously a nebulous and unreliable factor from which no inference can be drawn: in any case. it is no test of value especially in literature. Epic poems still

